# சிவஞானம்



சென்னை

மாணவர் மன்ற வெளியீடு

1960

# சிவஞானம்

அல்லது

## உயிர்களிடத்து அன்பு

பேராசிரியர் மயிலை. சிவமுத்து அவர்கள்
எழுதியது

சென்னை மாணவர் மன்றம்
17, இரத்தின முதலி தெரு,
சென்னை-1.



[விலை 1·50

# ஆக்கியோன் குறிப்பு

உயிர்களிடத்து அன்பு காட்டுதற்குக் குழந்தைகள் சிறு வயதிலிருந்தே பழகி வருதல் வேண்டும் என்னும் நோக்கத்தால், பசு, குதிரை, ஆடு முதலிய மிருகங்கள் மக்களிடம் படும் துன்பங்களை ஓர் இனிய கதைபோல் தொகுத்து எழுதப்பட்டதாகும் இச் சிறு நூல்.

எல்லா உயிர்களிடத்தும் அன்பாயிருத்தலோடு நன்றி மறவாமை, பெரியோர்க்கு அடங்கி நடக்கும் தன்மை, எத்தகைய துன்பங்களிலும் சிறிதும் மனச்சோர்வடையாமை, கடவுளிடத்து அன்புடைமை, நல்லோர் நட்பு முதலிய பல சிறந்த ஒழுக்கங்களையும் இதைப் படிக்கும் குழந்தைகள் எளிதில் அடைதல் கூடும் என்பது என் எண்ணம்.

இச்சிறு புத்தகத்தைக் கடைக்கணிக்கும் பெரியோர்கள் ஒருமுறை முழுதும் படித்துப் பார்த்துத் தங்கள் குழந்தைகளுக்குப் பயன்படுமாறு செய்வார்களென நான் பெரிதும் நம்புகிறேன்.

இங்ஙனம் :

மயிலை. சிவ முத்து.

# பொருளடக்கம்

# சிவஞானம்

அல்லது

# உயிர்களிடத்து அன்பு

---

## குப்புசாமிப் பிள்ளையும் சிறுவரும்

வேனிற்கால விடுமுறையின் பொருட்டுப் பாடசாலைகள் யாவும் மூடப்பட்டன. அப்போது சிறுவர்களின் கொண்டாட்டம் கூறவொண்ணாது. அன்று, அவர்கள் தங்களுக்குக் கிடைத்த அவ்வோய்வு நாட்களை எண்ணி யெண்ணி இன்புறலாயினர். ஆதலால், அவர்கள் முகத்தில் களிப்புக் கூத்தாட ஆரம்பித்தது. அச்சிறுவர்கள் ஓட்டமும் நடையுமாய்ச் சென்று வீட்டை யடைந்தனர்; தங்கள் பழைய புத்தகங்களை யெல்லாம் பத்திரமாகப் பெட்டியில் வைத்தனர்; வெகு நாட்களாக எதிர்பார்த்திருந்த இவ்விடுமுறை நாட்களை எவ்வாறு கழிப்பது என முடிவில் எண்ண மிடலாயினர்.

ஒரு நாள் பகல் இரண்டு மணி யிருக்கலாம்; ஒரு வீட்டின் தெருத்திண்ணையின்மீது சில சிறுவர்கள் உட்கார்ந்து இருந்தனர். அவர்கட்கு இடையே புதியவர் ஒருவர் அமர்ந்து இருந்தார். அவர் பெயர் குப்புசாமிப் பிள்ளை. அவர் சிறுவயதில் மிகத் தாழ்ந்த நிலைமையில் இருந்தவர்; நல்லொழுக்கத்தாலும் விடா முயற்சி

யாலும் பின்னர்ச் சிறந்த செல்வந்தராயினர். ஆதலின், அவர் தம்மிடத்துவரும் சிறுவர்களுக்குப் பல்வகையானும் நல்லொழுக்கத்தைப் போதித்து வந்தார். அச்சிறுவர்கள் பொருட்டு அன்று அவர் ஏதோ ஒன்றை எழுதி வைத்திருந்தார். அதைக் கேட்க வேண்டுமென்னும் விருப்பால் அவர்கள் அம்முதியவரைச் சூழ்ந்திருந்தனர்.

குப்புசாமிப் பிள்ளை, தாம் எழுதி வைத்திருந்த காகிதக் கற்றையைக் கையில் எடுத்தார். சிறுவர்களின் முகம் அப்போது அழகுற்று விளங்கியது. அவர்கள் அம்முதியவரின் முகத்தை மிக்க ஆவலோடு நோக்கிக் கொண்டிருந்தனர்.

"தாத்தா, இன்னும் என்ன தாமதம்? சீக்கிரம் ஆகட்டும்—ஆகட்டும்," என்று அவரைப் படிக்கச் சொல்லி வற்புறுத்தினர் அச்சிறுவர்களில் சிலர்.

"அடே, இரைச்சல் இடவேண்டாம். நம் தாத்தா ஒரு கதை எழுதி யிருக்கின்றார். சிறிது நேரம் பேசாதிருங்கள்; அப்போதுதான் அவர் அதைப் படிப்பார்," என்று சொல்லி, அவர்கள் பேச்சை அடக்க முயன்றான் வேறொரு சிறுவன்.

சிறுவர்களின் கொண்டாட்டச் செயல்களைக் கண்ட குப்புசாமிப் பிள்ளை புன்முறுவலோடு அவர்களை நோக்கி, "பிள்ளைகளே, நான் இதில் எழுதியுள்ளவை யாவும் உண்மையில் நடந்தவைகளே என்பதை என்றும் மறவாதேயுங்கள். உங்களில் ஒருவன் இதனை வாசிப்பான். மற்றவர்கள் கருத்துடன் கவனித்துக் கேளுங்கள். இதில் உங்களுக்கு நேரும் சந்தேகங்களை நான் முடிவில் தெளிவாக விளக்கிக் கூறுகின்றேன்.

ஆதலின், நீங்கள் இடையில் யாதும் தடைசெய்ய வேண்டாம்,'' என்று சொல்லித் தமக்கு அருகே அமர்ந்திருந்த **சிவஞானம்** என்னும் சிறுவனிடம் அக் காகிதக் கற்றையினைக்கொடுத்தார். சிவஞானம் அதனைத் தன் இருகரங்களாலும் மகிழ்வோடு பெற்று, உரத்த குரலெடுத்துத் திருத்தமுற வாசிக்கலாயினன் :

## குதிரைக் குட்டியும் பசுவின் கன்றும்

[ஒரு வீட்டின் தெருப் புறத்தில், ஒரு கம்பத்தில், பசுவின் கன்று ஒன்று கட்டப்பட்டிருந்தது. அதன் அருகே ஒரு குதிரைக் குட்டி மெல்லச் சென்றது.]

**குதிரைக்குட்டி:** — ஓ பசுவின் கன்றே, என் அருமை நண்பனே, சுகந்தானா? நீ ஏன் ஏங்கி நிற்கின்றாய்? நாளுக்கு நாள் உன் உடம்பு இளைத்து வருதலின் காரணம் என்ன? முன்னர் நீ மிக அழகாகக் காணப்பட்டாய்; இப்போது உன் உடம்பில் எலும்பும் தோலுமே யன்றி வேறு ஒன்றும்



காணப்படவில்லையே! இதன் காரணம் என்ன ?— (சிறிது நேரம் யோசிக்கின்றது)—ஓ ! சரிதான்— நான் இப்போது தெரிந்துகொண்டேன் — நண்பனே, நீ மிகவும் துள்ளித் துள்ளிக் குதிக்கின்றாய்; அதனால்தான் உன் உடம்பு இவ்வாறு இளைத்து

வருகின்றது. இனி அவ்விதம் செய்யவேண்டாம். —என்னைப் பார் — நான் எவ்வளவு இன்பமாய் இருக்கின்றேன் !

பசுவின் கன்று—(மெல்லிய குரலுடன்) ஓ குதிரைக் குட்டியே, நீயே புண்ணியசாலி. உனக்கோ எவ் விதத் துயரமும் இல்லை. நீ உன் தாயிடமிருந்து எவ்வளவு பால் வேண்டுமானாலும் அருந்தலாம் —எப்போது வேண்டுமானாலும் அருந்தலாம். என் தலையில்தான் ஈசன் இவ்வாறு எழுதிவிட்டான். இதற்கு நான் என் செய்வது ?



(வருந்தித் தலை குனிகின்றது.)

குதிரைக்குட்டி—ஓ அருமைக் கன்றே, நீ உரைப்பது விந்தையினும் விந்தை ? 'பால் உண்ணவேண்டாம்,' என்று உன்னை யார் தடுக்கின்றார்கள் ? என்னைப்போல் நீயும் ஏன் வயிறாரப் பால் உண்ணலாகாது ? (ஆச்சரியத்துடன்) உன் தாய் — என்ன ? — அவ்வளவு கொடியவளாகவா இருக்கிறாள் ! நண்பா, அதை நான் சிறிதும் நம்ப மாட்டேன்.

பசுவின் கன்று—(ஆராமையுடன்) ஆ என் நண்பா ! அவளா கொடியவள் ! அவ்வாறு உரைக்க என் நெஞ்சமும் துணியுமோ ? அவளது நற்குணத்தின்

பொலிவை நான் எவ்வாறு எடுத்துரைப்பேன்? ஆ! என்ன அன்பு!—என்ன அருமை!—யாவும் இருக்கின்றன — யாது பயன்? — அந்தோ! தெய்வமே!—நாங்கள் இவ்விதம் துன்புறுதல் நியாயமோ? இதைத் தாங்கள் எவ்வாறு சகித்துக் கொண்டிருக்கிறீர்கள்?

(மிகுதியும் வருந்துகின்றது.)

**குதிரைக்குட்டி**—என் அருமை நண்பா, வருந்தவேண்டாம். உனக்கு யாது தீங்கு நேர்ந்துவிட்டது? ஒன்றும் இல்லையே!—நீயும் பால் உண்ணுகிறாய்; நானும் பால் உண்ணுகிறேன்! அவ்விதமிருக்க நீ ஏன் வருந்துதல் வேண்டும்! (ஆச்சரியமுறுகின்றது)—அன்றியும், நண்பா, உன் தாயின் பால் மிகவும் இனிப்பாய் இருக்கும் என்று யாவரும் உரைக்கின்றனரே!

**பசுவின் கன்று**—அன்பனே, ஆம்; என் தாயின் பால் மிக்க இனிமையுள்ளது என்பது முற்றிலும் உண்மையே.—(ஆராமையுடன்) அதனால் அன்றோ அப்படுபாவி எனக்குச் சிறிதும் பால் கொடாது யாவற்றையும் தானே அடைகின்றான். — (மிக்க துயரத்துடன்) அந்தோ! அதை நினைக்க நினைக்க என் வயிறு பற்றி எரிகின்றதே!—அச்சண்டாளன் எனக்கும் என் அன்னைக்கும் இடையே எமனாகத் தோன்றினனே! கருணையங்கடலே! அப்பாவி புரியும் கொடுந்தொழிலைத் தாங்கள் கண்ணாரக் கண்டும் எங்ஙனம் சகித்திருக்கின்றீர்கள்? ஒரு கண நேரம் தாங்கள் இன்புற்றிருக்க அக் கொடிய-

வன் எங்களை விடுகின்ருனே ?—ஐயோ ! அப்பொழுதே அவன் மனம் பதைக்கின்றதே! அப்பாதகன் மிக்க விரைவுடன் வந்து என்னை இழுத்துக் கொண்டுபோய்க் கம்பத்திலன்ருே கட்டிவிடுகின்ருன் ! — ஓ இறைவனே ! ஈசனே ! தாங்கள் எப்போதுதான் திருவுளம் இரங்கி என் துயரைத் தீர்ப்பீர்களோ—அறியேன்.

(கண்ணீர்வடித்த வண்ணம் தலைகுனிந்து நிற்கின்றது.)

குதிரைக் குட்டி—(இரக்கத்துடன்) அருமை இளங் கன்றே, நீ உரைப்பது எனக்கு இன்னமும் நன்ருக விளங்கவில்லை. உன் குறை யாது? உன்னைத் துன்புறுத்துவோர் யாவர் ?—வருந்த வேண்டாம் ; நிதானமாகச் சொல்.

பசுவின் கன்று—(ஏக்கத்துடன்) என் இன்னுயிர் நேயனே, நான் என்னென்று இயம்புவேன் ? —அது சொல்லி முடியாது. எனினும், சிறிது உரைக்கின்றேன் : நண்பா, என் எசமானனை நீ அறிந்திருக்கலாம். அவனை இடையன் என்று யாவரும் அழைக்கின்றனர். அவன் எனக்குப் புரியும் தீமைகட்கோ எல்லையில்லை.—இப்போது நான் பிறந்து இரண்டு மாதங்கள் ஆகின்றன எனினும், நான் வயிருரப் பால் உண்டது என்றும் இல்லை.—அவன் அதிகாலையில் என்னை மிக்க அவசரத்துடன் கம்பத்தினின்றும் அவிழ்த்து என் அன்னையினிடம் விடுவான். அப்போது நான் மிக்க ஆனந்தத்தோடு துள்ளிக் குதித்துக் கொண்டு பால் உண்ணுதற்குச் செல்வேன்

என் அன்னையும், என்னைக் காணவேண்டும் என்னும் அவாவினால், 'அம்மா-அம்மா' என்று வாய்விட்டு அரற்றிக் கொண்டிருப்பாள். நான் அருகே வந்ததும், அவள் அன்போடு எனக்குப் பால் ஊட்டுவாள். ஆனால், என் நண்பனே, நான் எவ்வளவு நேரம் பால் உண்ணுவேன் என்று எண்ணுகின்றாய்? இரண்டு வாய்ப்பாலே னும் நான் அருந்தியிருக்கமாட்டேன். அதற்குள், அக்கொடியவன் ஓடிவந்து, இழுத்துப் பிடித்து என்னை என் அன்னையின் முன்னங்கால்களோடு சேர்த்துக் கட்டி விடுவான். பின்னர், அவன் என் அன்னையிடம் உள்ள பாலை ஒரு பெரிய செம்பில் நிறையக் கறந்து கொள்வான்—ஆ! என் நண்பனே, அச்சமயம் என் மனம் எவ்வாறு துடிக்கும்?—அதனை நீயே எண்ணிப்பார். அக்கொடுமையைக் காண என் நெஞ்சம் சிறிதேனும் சகிக்குமா?—யாருக்குத்தான் இயலும்? ஆதலால், நான் எங்ஙனமேனும் அக்கட்டினை அவிழ்த்துக் கொண்டு, அருகே சென்று, பால் உண்ண முயலுவேன். அப்போது, அப்படுபாவி என்னைக் கோபத்துடன் உறுத்துப் பார்த்து, என் தலையில் ஓர் அடி கொடுத்து, மறுபடியும் என்னை என் அன்னையின் முன்னங்காலோடு இறுகச் சேர்த்துக் கட்டிவிடுவான். அச்சமயம், நான்



ஒன்றுந் தோன்றப் பெருது, அழுதுகொண்டே என் அன்னையின் அடிவயிற்றில் முட்டுவேன். அப்போது, என் தாய் எனக்குப் பல தேறுதல்கள் கூறித் தன் மெல்லிய நாவினுல் என்னை அன்போடு தடவிக் கொடுப்பாள்.

**குதிரைக் குட்டி** — (துயரத்துடன்) ஐயோ பாவம்! இதைக் கேட்க எனக்கு மிக்க வருத்தமாய் இருக்கிறது. ஓ கன்றே, அதன் பின்னராவது அவன் சிறிது நேரம் உன்னைப் பால் உண்ண விடுகின்ருனு?

**பசுவின் கன்று**—(ஆராமையுடன்) அந்தோ! அந்த அநியாயத்தை ஏன் கேட்கின்ருய்?—இவ்விதம் பாலைக் கறந்து கொண்டதும், என் எசமானன் என்னைக் கட்டினின்றும் அவிழ்த்து விடுவான். நான் அப்போதாவது, 'மிகுந்துள்ள பாலில் சிறிது அருந்தலாம்', என்று அருகே செல்வேன். சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம், என் எசமானன் இரண்டு பெரிய தகரப் பாத்திரங்களைக் கையில்



பிடித்துக்கொண்டு, என் அன்னையைத் தெரு விற்கு ஓட்டிச் செல்வான். அப்போது நான், பால்

உண்ணுதற்காக என் தாயைத் தொடர்ந்து செல்வேன். அதற்குள் என் எஜமானன் மகன் ஓடிவந்து, என்னைப் பிடித்து இழுத்துக் கயிற்றினுல் பைபோல் அமைந்துள்ள ஒன்றை என் வாயில் மாட்டி, எனக்கு வாய்ப் பூட்டிட்டு, என் அன்னைக்கும் எனக்கும் தொலைதூரம் இருக்கும்படி என்னை நடத்திச் செல்வான். அச்சிறுவன் இவ்விதம் என்னை அழைத்துச் செல்லுங்காலத்து என்னை அடிப்பதும், அலட்டுவதும், பிடித்து இழுப்பதும், வயிற்றில் குத்துவதும், பிடித்துத் தள்ளுவதும் — அந்தோ! சொல்லி முடியாது சொல்லி முடியாது. ஆனுல், இவையாவும் அப்பாதகச் சிறுவனுக்கு அச்சமயம் விளையாட்டாகவே தோன்றும்.

**குதிரைக்குட்டி**—ஐயோ! என்ன அநியாயம் இது! பாலின்றி வருந்தும் உன்னைக் கயிறு கொண்டு இழுத்துச்செல்வதோடுஅமையாது,உன் வாயிலும் ஏதோ ஒன்றைப் பூட்டி, இவ்வாறெல்லாம் துன்புறுத்த அவனுக்கு எவ்வாறுதான் மனம் துணிந்ததோ. தெரியவில்லை? — அவன் பாலைத்தான் கறந்து கொண்டானே, உன்னையும் உன் தாயையும் வெளியே ஏன் இழுத்துச் செல்லவேண்டும்.

**பசுவின் கன்று** — (ஆராமையுடன்) ஆ! அதைத்தான் நான் இப்போது கூறப் போகின்றேன். அவன், முன்பு கறந்து கொண்டதோடு நில்லாது, எங்கள் இருவரையும் ஒவ்வொரு வீடாக அழைத்துச் சென்று, அங்கங்கே, முன் சொல்லியபடி, பால் உண்ணவிடுவது போல் என்னை ஏமாற்றிப் பின்-

னர், தன் செம்பில் கறந்து, அதை அந்தந்த வீட்டாருக்குஅளந்துகொடுத்துப் பணம்பெறுகின்ருன்.

குதிரைக்குட்டி — (இரக்கத்துடன்) ஆ-ஆ ! கொடுமை கொடுமை ! இது முற்றிலும் கொடுமை ! உயர்ந்த மானுடப் பிறவியைப் பெற்ற அவனுக்கு இது தோன்றவில்லையா ?— அந்தோ ! கடவுள் நமக்காகத்தந்த பாலை இவன் கறந்து பொருள் சம்பாதிக்கின்ருனே !

பசுவின் கன்று—ஐயோ ! அதை நான், 'வேண்டாம்,' என்று சொல்லவில்லையே !— எவ்விதமிருப்பினும் அவன் எங்கள் எசமானன் ; எங்களுக்கு வைக்கோல் புல் முதலியன அளித்து எங்களைக் காப்பாற்றுகின்ருன் ; எங்களை நீரில் குளிப்பாட்டித் தேய்த்துக் கழுவுகின்ருன் ; தவிடும் பிண்ணுக்கும் தந்து எங்களை வளர்க்கின்ருன். ஆதலால், அவன் பால் கறந்து கொள்ளலாம். அதில் ஒன்றும் தீமையில்லை. ஆனல், அவன் முழுவதையும் கறந்து கொண்டால் நான் என் செய்வது ? — நான் குடித்து மிகுந்துவிடும்படி கடவுள் என் அன்னையினிடம் பால் நிரம்ப அளித்திருக்கின்ருர். அம்மிகுதியைப் பெற்று அவன் மகிழலாகாதா ? எளிய பிராணியாகிய என்மீது அவன் சிறிது கருணை வைத்து எனக்கு வயிருரப் பால் கொடுக்கவேண்டாமா ? அவன், தன் குழந்தைகளைக் கவனிப்பது போல் என்னையும் சிறிது கடைக் கணிக்கலாகாதா? நானும் அவனுக்கு ஒரு குழந்தை யல்லவா ?— (சிறிது நேரம் மௌனமுற்று நிற்கின்றது) அந்தோ ! யாது கூறினும் என்ன பயன் ? அக்

கொடியவன் மனம் சிறிதும் இளகாது - இளகாது. ஓ ஈசா ! தாங்களே என்னைப் பாதுகாத்தல் வேண்டும்......அந்தோ ! கடவுளும் என்னைக் கண்ணெடுத்துப் பாராது இவ்விதம் கைவிடுகின்றரே ! நான் என் குறைகளை யாரிடம் கூறி ஆறுதல் அடைவேன் ?.........ஆ ! (துயரத்துடன்) என் நண்பன் ஒருவன் இருந்தான்—அவனையும் என் எசமானன் இவ்விதமே பால் கொடாது புறக்கணித்து வந்தான். அதனுல், அவன் அடைந்த துயரம் சிறிதன்று. என்னைப் போலவே அவன் நாளுக்கு நாள் உடல் இளைத்துவந்தான். அவனைக் கடைக்கணிப்பார் ஒருவரும் இல்லாதொழிந்தனர் — அந்தோ ! (அழுதுகொண்டே) சென்ற வாரந்தான் —அவன்—இறந்துபோனான்....அது கண்டு நான் மிகுதியும் துன்புற்றேன். அன்று இரவு முழுவதும் நான் கண்ணுறங்கவில்லை. மறுநாள் நான் புறக்கடைக்குச் சென்றேன்.— ஆ என்ன ஆச்சரியம் ! இறந்து போன அவன் உயிர் பெற்று முன்னிலும் பன்மடங்கு பருத்து, ஒரு புறத்தே நின்றிருத்தலைக் கண்டேன். அப்போது எனக்கு உண்டான ஆனந்தத்திற்கு அளவே இல்லை. நான் மிக்க களிப்போடு துள்ளிக் குதித்து அவன் அருகே சென்றேன்.......ஐயோ! ஈசனே! அந்தஅநியாயத்தை நான் என்னென்று சொல்லுவேன். (கண்ணீர் வடித்த வண்ணம்) அது, என் நண்பன்



தோலைக் கொண்டு வைக்கோலினால் செய்த பதுமை யாக இருந்தது.—ஆ ! அப்போது நான்பட்ட துன்பம் எல்லாம் வல்ல இறைவனுக்கே தெரியும்.......(சிறிது நேரம் சும்மா விருக்கின்றது)......அருமை நண்பா ! எனக்கு இதற்குமேல் பேசச் சக்தியில்லை...... இளைப்பு மேலிடுகின்றது ...... கை கால்கள் நடுக்க முறுகின்றன .......கண்கள் ...... சுழலுகின்றன ......... பேசுதற்கும் ......நா......எழவில்லை........விழுந்து அந்தோ! ....... ஜகதீசா!......அந்தோ! ஜக—தீ—சா!......

[இவ்விதம் கூறிக்கொண்டே அக்கன்று கீழே விழுந்து இறந்து விட்டது. அருகே இருந்த குதிரைக் குட்டி சிறிது நேரம் ஒன்றும் தோன்றப் பெருமல் திகைத்து நின்றது.]

குதிரைக் குட்டி—(கண்களில் நீர் ததும்ப) ஆ நண்பனே ! —நண்பனே ! உனக்கு முடிவில் இக்கதியா நேர்ந்து விட்டது ! ஐயோ ! இதை அறிந்தால், உன் தாய் என்ன துயர முறுவாள் ! — ஆ ! அக் கொடியவனுக்கு இனியேனும் புத்திவருமோ? ஓ இறைவனே ! ஈசனே ! இதுவும் உன் திருவுளச் சம்மதமோ ?—

[துயரத்துடன் தன் தாயைக் காணச் செல்லுகின்றது.]

## அன்புள்ள சிறுவர்கள்

சிவஞானம் என்னும் சிறுவன், இதைப் படிக்கும் போது பெரிதும் துன்புற்ருன். அவனுக்குத் துயரத் தால் குரல் கம்மிற்று. கண்களில் நீர் ததும்பி அவனை அதற்குமேல் படிக்க வொண்ணுது செய்தது. மற்றச்

சிறுவர்களும் தங்கள் கண்களில் நீர் வடிக்கலாயினர். சிறிதுநேரம் வரையில் அச்சிறுவர்கள் தங்களை மறந்து நின்றனர்.

அச்சிறுவர்களுக்கு அப்போது பல சந்தேகங்கள் தங்கள் மனத்தே தோன்றின. குப்புசாமிப் பிள்ளை இடையில் ஒன்றும் கேட்க வேண்டாம் என்று முன்னரே கட்டளை யிட்டிருந்ததால் அவர்கள் வாளா விருந்தனர். பின்னர், சிவஞானம் தன் கண்களைத் துடைத்துக்கொண்டு மறுபடியும் தொடர்ந்து படிக்கலாயினன்.

## குதிரையும் அதன் குட்டியும்

[கொட்டகையில் ஒரு குதிரை கட்டப்பட்டிருக்கின்றது; அதன் குட்டி தொலைவில் தயங்கி நிற்கின்றது.]

**குதிரை**—குழந்தாய், இத்துணைநேரம் நீ எங்குச் சென்றிருந்தாய்? உன்னைக் காணாது நான் எவ்வளவு நேரம் கவலைகொண்டிருக்கின்றேன். கண்மணி, என் அருகே வருவாய் (குட்டி தன் தாயினிடம் மெல்லச் செல்லுகின்றது. தாய் அதன் முகத்தை உற்று நோக்குகின்றது)—ஐயோ! நீயேன் கண்கலங்கி நிற்கின்றாய்?—என் செல்வமே, உனக்கு யார் யாது



துன்பம் புரிந்தனர் ?—நீ பெருமூச்சு விடுவதற்குக் காரணம் என்ன ?—வருந்த வேண்டாம் ; சீக்கிரம் சொல்.

குட்டி –[சிறிது நேரம் மௌனமாய் இருந்து, பின்னர்] தாயே, என்னை ஒருவரும் துன்புறுத்தவில்லை— ஆனால், ......அம்மணீ, நான் என்னென்று சொல்லுவேன்—நமக்கு அண்டையில் உள்ள இடையன் வீட்டுக் கன்று—அந்தோ ! அநியாயம் —அநியாயம்......பாலின்மையால் வருந்திக் கீழே விழுந்து இறந்து போயிற்றம்மா ! அந்தப் படுபாவி இடையன் சிறிதும் பால் கொடாமல் அதை வருத்தினனும்—அது தன் குறைகளை யெல்லாம் என்னிடம் கூறி—இப்போது தான்—என் கண்ணெதிரே இறந்து போயிற்றம்மா !

(வருந்துகின்றது.)

குதிரை —(இரக்கத்துடன்) ஆ ஈசா ! கொடுமை— கொடுமை 'பசுவினங்கள் மனிதர்களால் பாராட்டிப் போற்றப்படுகின்றன,' என்று நான் இதுகாறும் எண்ணியிருந்தேன்—ஐயோ பாவம்— தெய்வமே ! அவைகளும் எங்களைப்போல்தானு வருந்தி இறக்க வேண்டும் ?

குட்டி—(ஆச்சரியத்துடன்) அம்மா, அவைகள்தாம் பாலின்மையால் வருந்துகின்றன—நமக்கு என்ன துன்பம் இருக்கின்றது !—நாம் சுகமாகத் தானே வாழ்ந்து வருகின்றோம் ?

குதிரை—குழந்தாய், நீ ஏதும் அறியாய். (ஏக்கத்துடன்) அந்தோ ! நான் இதுவரையில் பட்ட

பாட்டினை நீ அறிந்தால் நெஞ்சம் திடுக்கிட்டு அயர்வாய். (வருத்தத்தோடு) ஆ இறைவா! இன்பமாய்க் காட்டில் திரிந்திருந்த எங்களை மானுடர்கட்கு மீளா அடிமைகளாக்கி வருத்துவது தங்கள் கருணைக்கு அழகாகுமா? ஓ இறைவனே! ஏழைகளாகிய எங்கள் மீது சிறிது கடைக்கண் நோக்கலாகாதா?

குட்டி—(ஆச்சரியத்துடன்) அம்மணீ, நாம் காட்டிலா வசித்திருந்தோம்! ஆ! எனக்கு இத்துணை நாட்களாக இது தெரியாதே!—(ஆர்வத்துடன்) தாயே, எப்போது வசித்திருந்தோம்? நம் வாழ்நாட்களை அங்கே எவ்வாறு கழித்து வந்தோம்? அவைகளையெல்லாம் எனக்குத் தயை செய்து சொல்லுங்கள் அம்மா!

**குதிரை**—என் கண்ணே, அந்தப் பாக்கியம் பெற நீயும் கொடுத்து வைக்கவில்லை; நானும் கொடுத்து வைக்கவில்லை. நமது முன்னோர்கள் முதன் முதல் காட்டில்தான் வசித்து வந்தனராம்.—ஆ! அந்த இன்ப வாழ்க்கையை நான் எவ்வாறு எடுத்துரைப்பேன்!—அங்கே, எங்குப் பார்த்தாலும் பசும்புற்கள், பச்சைப் பசேலென்று செழித்தோங்கி வளர்ந்திருக்குமாம்; இடையிடையே உள்ள காட்டாறுகளில், தெளிந்த நீர்ப்பெருக்குப் பாலெனப் பொலிவுற்று வழிந்தோடுமாம். நம் இனத்தவர்கள், அந்த இன்ப வனத்தில் தம் இச்சையாய்த் திரித்து, வயிறுரப் புல் தின்று, நீர் அருந்தி, ஆனந்தமாய் வாழ்ந்து வந்தார்களாம்.

குட்டி—(மனக்களிப்போடு) ஆ! ஆ!—என்ன இன்பமான இடம்!—அம்மா, அந்த வனம் இப்போதும் இருக்கின்றதா? அவ்விடத்தில் நம் இனத்தவரில் யாரேனும் இன்னமும் இருந்து வருகின்றனரா?

குதிரை—அதில் என்ன சந்தேகம்? அத்தகைய வனங்கள் பல இப்போதும் இருக்கின்றன; நம் இனத்தவரும் சிலர் அவ்விடங்களில் இன்புற்று வாழ்ந்து வருகின்றனர்.—என் செல்வமே, அதை நீ ஏன் கேட்கின்றாய்?

குட்டி—(ஆச்சரியத்துடன்) என்ன அம்மா? அப்படிச் சொல்லுகின்றீர்கள்! நாம் ஏன் அங்குச் செல்லுதல் கூடாது? அம்மணீ, தங்களுக்குச் செல்லும் வழி தெரியுமோ? தெரிந்தால் இப்போதே புறப்படுங்கள்; நாம் அவ்விடத்தே சென்று இன்பமாய் வாழலாம்.

குதிரை—(ஏக்கத்துடன்) அந்தோ! குழந்தாய், நீ யாதும் உணராமல் உரைக்கின்றாய். நாம், நம் இச்சையாய் எங்கும் அடி எடுத்து வைத்தல் கூடாது. மானிடர்கள் நம்மை வழியடிமை கொண்டிருக்கின்றனர். அவ்வடிமைத் தன்மையினின்றும் நீங்க நம்மால் சிறிதும் இயலாது.

குட்டி—(திகைத்து) ஏன் இயலாது? இஃது என்ன ஆச்சரியம்! நாம் ஏன் அம்மா அவர்கட்கு அடிமைப்பட வேண்டும்?

குதிரை—என் கண்மணீ, அதனை யானும் அறிந்திலேன். அது இறைவன் இட்ட சாபம்; நம் இனத்தவர் செய்த பாவம். இவ்வளவே எனக்குத் தெரியும்—(ஆராமையுடன்) என் செல்வமே, நீ

அதன் பொருட்டுச் சிந்தித்தல் வேண்டாம். ஆகாத ஒன்றைக் குறித்து ஆலோசித்துப் பயன் என்ன ? —(துயரத்துடன்) அந்தோ ! நமக்கு விடுதலையா வேண்டும் ? வேளைக்கு வயிறார உணவு கிடைத் தால் போதாதா ? நம்மைத் துன்புறுத்தாமல் சிறிது நேரம் விட்டுவைத்தால் போதாதா ? (கடவுளை நோக்கி) ஓ தெய்வமே ! என் செல்வமும் என் போல் உணவுக்காக அல்லலுற வேண்டாம்— கருணையில்லாக் கொடியோரால் துன்பமுற வேண் டாம் ?

(வருந்திக் கண்ணீர் வடிக்கின்றது )

குட்டி—(திகைப்புடன்) அம்மா ! நான் இன்பமாகத் தானே வாழ்ந்து வருகின்றேன் ! எனக்கு யாது துன்பம் நேரிடப் போகின்றது ?

குதிரை—(ஆராமையோடு) என் செல்வமே, அதனை நான் எவ்வாறு தெரிந்துரைப்பேன் ? அப்பாவி வந்து உனக்கு ஏதேது புரிவானோ? இறையவன் செயலை யாவரே அறிவர் ?—(கடவுளை நோக்கி) பாவியேன் படுதுயரம் பார்த்திருக்கும் பரம் பொருளே ! நான் பட்டதெல்லாம் போதும் ! என் குழந்தையின் மீதேனும் தாங்கள் கருணைவையுங் கள் ; என் செல்வம் இன்புற்று வாழத் தாங்கள் அருள் செய்யுங்கள்.

(கண்ணீர்விட்டுக் கதறுகின்றது.)

குட்டி—(திகைப்புடன்) சிறிது நேரம் நின்று, பின்னர்) என் அருமைத் தாயே, அழவேண்டாம், அழ வேண்டாம் ; தங்களுக்கு என்ன துன்பம் நேர்ந் தது ? தாங்கள் ஏன் இவ்விதம் துன்புறல் வேண்-

டும் ? அம்மணீ ! அதையேனும் தயைசெய்து எனக்கு விளங்கச் சொல்லுங்கள்.

குதிரை—(ஒருவாறு தன் மனத்தைத் தேற்றிக்கொண்டு) ஆ ! அதனை ஏன் கேட்கின்றாய் ? என் அல்லல் வாழ்க்கையைச் சொல்லவும் வேண்டுமா ? என் கண்ணே, அதனை நினைப்பினும் என் மனம் நடுக்க முறுகின்றது ; எனினும் சிறிது உரைக்கின்றேன்.

என் செல்வமே, எனக்கு இப்போது வயது பதினொன்கு நடக்கின்றது ; நான் இதுகாறும் பட்ட துன்பங்களுக்கு ஓர் அளவில்லை. நான், குதிரை வியாபாரம் செய்யும் ஓர் மகமதியன் வீட்டில் பிறந்தேன் ; அவன் என்மீது எவ்வளவு அன்பு காட்டினான் என்பதை இரண்டொரு சொற்களால் இயம்பிவிடுகின்றேன். நான் பிறந்த சிலநாட்களுக்குள் அவன் என் தாயை வேறொருவனுக்கு விற்றுவிட்டான். அப்போது நான் பட்ட துயரம் சிறிதன்று. பாலின்மையாலும், பராமரிப்பு இன்மையாலும் நான் பெரிதும் துன்புற்றேன்.

என் எசமானன் வியாபாரத்தின் நிமித்தமாக அடிக்கடி வெளியூர்கட்குச் சென்று வருவான். அக்காலங்களில் அவன் வீட்டிலுள்ள சிறுவர்கள் எனக்குப் புரிந்த தீமைகள் மிகப்பல. அக்கொடியவர்கள் என் முதுகின்மீது ஏறிச் சவாரி செய்ய முயல்வார்கள் ; வேலிகளின் மீதும், முட் புதல்களின் மீதும் என்னை அச்சுறுத்தித் துரத்தி, அவைகளைத் தாண்டச் செய்வார்கள் ; கற்களையும், கழிகளையும் என் மீது வாரி எறிந்து என்னை விரைந்து ஓடச் செய்-

வார்கள் ; ஏதேதோ நான் பார்த்திராத பொருள் களையெல்லாம் என்னிடம் கொண்டுவந்து காட்டி, என்னை மருளச் செய்வார்கள்—என் வாலைப்



பிடித்து இழுப்பார்கள்—என் வயிற்றில் ஓங்கி யிடிப்பார்கள்—கைகொட்டி நகைப்பார்கள். இவ்வாறு புரிதலையே அச்சிறுவர்கள் பெருவிளையாட்டாக எண்ணியிருந்தார்கள்.

குட்டி—அம்மா, நாமும் அவர்களைப்போல் உயிருள்ளவர்கள் அல்லவா! நமக்குத் துன்பம் செய்தால் நாம் வருந்துவோம் என்பதை அச்சிறுவர்கள் அப்போது உணரவில்லையா ?

குதிரை—ஐயோ! அவர்கள் அதனைச் சிறிதும் கருதினார்களில்லை ; தங்கள் விளையாட்டினையே பெரிதாக நினைத்தார்கள்.

குழந்தாய், அச்சிறுவர்கள் எனக்குத் தீமை புரியுங் காலத்து, நான் அச்சத்தால், அவர்கள் கைக்குப் பிடிபடாமல், மிக்க வேகமாய் ஓடுவேன். அதனால், அவர்கள் எனக்குப் பந்தயக்குதிரை என்று பெயர் வைத்தார்கள். சிறுவர்கள் இட்ட பெயர் எனக்கு நிலைத்து நின்றுவிட்டது. என் ஓட்டத்தைப் பிடிக்க

ஒருவராலும் இயலாது என்று எல்லோரும் இயம்ப லாயினர். இதனைக் கேள்வியுற்ற ஒரு குதிரைப் பந் தயக்காரன் என்னை மிக்க விலை கொடுத்து வாங்கிக் கொண்டான். அவனே ஒரு முரட்டு மனிதன். அவன் இன்பங் கொண்டகாலத்து என்னைச் சீராட் டிப் பாராட்டுவான் ; தான் விரும்பிய பண்டங்களை யெல்லாம் எனக்கு வாங்கித் தருவான் ; என் கழுத் தில் பல ஆபரணங்களை அணிவான் ; பூமாலைகள் வாங்கிப் புனைவான். ஆனால், அவன், கோபங் கொண்ட காலத்தோ. என்னைக் கொடுமையாய்த் தண்டிப்பான். அப்போது அவன் கையிலிருப்பது யாதாயிருப்பினும் கருதான் ; அதனைக் கொண்டு என்னை ஓங்கிப் புடைப்பான். இத்தகைய மூர்க்க எசமானன் எனக்குக் கிடைத்தான்.

என் கண்ணே, அவன் ஒரு சிறு வண்டி வைத்திருந் தான். அது ஒரு நூதனமான வண்டி. அதற்கு மேல் மூடி கிடையாது. அவ்வண்டியின் இருசக் கரங்களுக்கிடையே ஒரு சிறு பீடம் உயரமாக அமைக்கப்பட்டிருக்கும். அதன்மீது ஒருவருக்கு மேல் உட்கார வியலாது. அவ்வண்டி மிகவும் இலேசானது. அதை இரேக்கலா என்று அழைக் கின்றார்கள். என் எசமானன் என்னை அவ்வண்டி யில் அடிக்கடி கட்டியோட்டுவான். முதலில் அவன் என்னை அதில் பூட்டும்போது நான் மிகவும் மருட்சி யடைந்து துள்ளித் துள்ளிக் குதித்தேன் அப்பொழுது அவன் கோபங் கொண்டு தன் கையி லிருந்த 'சவுக்' என்னும் சாட்டையினால் என் முது கில் 'பளீர்-பளீர்' என்று அடித்து விட்டான். அ

சமயம் நான் பட்ட துன்பம் பரமனே அறிவார். அதற்குமுன் என்றும் நான் அவ்விதம் துன்புற்றதில்லை. அன்றுமுதல் நான் அவனிடம் எச்சரிக்கையாக இருந்து நடந்து வந்தேன். அவன் என்னை நாள்தோறும் காலை மாலைகளில் வண்டியில் பூட்டி ஓட்டிப் பழக்குவான். அவன் அவ்வண்டியில் ஏறியதும் நான் காற்றாய்ப் பறக்க வேண்டும். அவ்விதமின்றிச் சிறிது தாமதிப்பேனாகில், அவன் கையில் உள்ள கோல் தவிடு பொடியாகிவிடும். அவன் என்னை அடிக்கடி, பல பந்தயங்கட்கு ஓட்டிச்செல்வான். அக்காலங்களில் அவன் என்னை இலேசில் விடமாட்டான். அவன் கொடுமைக்குப் பயந்து நான் வாயுவேக மனோவேகமாகப் பறந்து செல்வேன். அநேகமாய் நானே அப்பந்தயங்களில் முதன்மை பெறுவேன். அப்போது, அவன் எனக்குப் புரியும் ஆடம்பரங்களுக்கு ஓர் அளவு கிடையாது. ஆனால், அவை எனக்குச் சிறிதும் இன்பங் கொடுத்ததில்லை.

என் ஆருயிரே, நான் ஒருநாள் மார்பு நோயினால் மிகுதியும் துன்புற்றிருந்தேன். அப்போது, அவன் என்னைப் பந்தயத்திற்கு ஓட்ட விரும்பினான். என் நோயின் கொடுமையினை நான் அவனுக்கு எவ்வாறு இயம்புவேன். என்னால் அச்சமயம் எடுத்து அடி வைக்கவும் இயலவில்லை. எனினும், அவன் கொடுமைக்குப் பயந்து நான் சிறிது கடுகி நடந்தேன். நான் பந்தயச்சாலையை அடைவதற்குள் எனக்கு அந்நோய் அதிகரித்து விட்டது. அ[illegible] மீது போட்டியாய் வந்த குதிரைகள் யாவும்

மான்போல் தாவி யோடின. நான் நோயின் மிகுதி யால் ஓட்டத்தில் சிறிது பின் வாங்கினேன். அது கண்ட எசமானன் என்மீது மிகுதியும் கோபங் கொண்டான். நான் வீணில் முரட்டுத்தனம் செய்கின்றேன் என்று அவன் எண்ணி விட்டான். அவன் என் வயிற்றின்மீதும் கால்களின் மீதும் கொடுத்த அடிகளுக்கோ கணக்கே யில்லை. அக் கொடியவன் என்னைக்கொன்று போட்டுவிட்டான். 'பளீர்—பளீர்' என்னும் சாட்டையின் சப்தம் என்னை அலறச் செய்தது. அந்தோ! அவன் பின்னும் செய்த கொடுமைகளை நான் என்னென் றியம்புவேன்! அச்சண்டாளன் தன் சாட்டையின் பின்புறத்தில் ஒரு நீண்ட இருப்பூசியைச் செருகி வைத்திருந்தான். அதைக் கொண்டு அப்பாதகன் என் முதுகின் பின்புறத்தில் பன்முறை குத்தினன். —என் செல்மே, நான் அப்போது என்ன பாடுபட் டிருப்பேன் என்பதை நீயே எண்ணிப்பார். நான் 'அந்தோ!—அந்தோ!' என அலறினேன்; 'ஈசா!—ஈசா!' எனப் பன்முறை இறைவனை வேண்டினேன்; துன்பத்தால் துணுக்குற்றுக் குதித்தேன்; உறுமி நிலத்தைப் பலமுறை உதைத்தேன்.; என் கழுத்தை நெளித்துக் கனைத்து மேலெழும்பிக் குதித்தேன். நான் அவ்வாறு புரிந்ததனுல் அவ்வண்டியில் இருந்த என் எசமானன் தன் பந்தயத்தை யிழந்து பூமி யில் குப்புறக் கவிழ்ந்தான். அருகே நின்றிருந்த சனங்கள் அவனைப் பரிகசித்துக் கைகொட்டி நகைத்தனர். நான் நெடுந்தூரம் ஓடிப் பிறகு, ஓ

இடத்தில் அலுத்து நின்றேன். அவன் நண்ப
களுள் ஒருவன் என்னைப் பிடித்து வந்து அவ



அருகே நிறுத்தினன். என்னைக் கண்டதும் அந்த மூர்க்கன் கொண்ட கோபத்திற்கு ஓர் அளவேயில்லை. அவன் கண்கள் இரண்டும் சிவப்பேறின; மீசை துடித்தது. ஆ! நான் என்னென்று சொல்லுவேன்! அச்சண்டாளன், தன் பற்களைக் கடித்துக்கொண்டு என் அருகே வந்தான்.—தன் கையிலிருந்த கத்தியால் ஓங்கி என் வயிற்றில் குத்தினன்.

குட்டி—(துயரத்துடன்) அந்தோ! அந்தோ !!—என்ன கொடுமை! என்ன கொடுமை !! — ஆ! அக்கொலைப் பாதகனை ஏன் அம்மா சும்மா விட்டீர்கள்? அப்போதே அக்கொடியவனைக் கடித்துக் கொன்று போடலாமே! — காலால் உதைத்து அவன் உயிரைப் போக்கியிருக்கலாமே! (கண்கலங்கி) ஐயோ! ஈசனே! இதுவும்

தங்களுக்கு நியாயமோ ? அவன் பந்தயம் வைத்துப் பணம் பெறுவதற்கு நாங்கள் தாமா அகப்பட்டோம் ? அவன் வெற்றி பெறுதற்கு அவனன்றோ ஓடுதல் வேண்டும்? அது வல்லவோ அவனுக்கு அழகு ? — மதியின் மிக்க மானுடர்கட்கு இது தெரியவில்லையா?— ஆ ! அநியாயம்— அநியாயம் ! அம்மா, பின்னர் என்ன நிகழ்ந்தது ? அதைச் சொல்லுங்கள்.

குதிரை கண்மணீ, நீ கண்ணீர் விட்டுக் கலங்கி நிற்க வேண்டாம் திக்கற்றவர்க்குத் தெய்வம் துணை செய்யும். என் அன்பே, அருமைச் செல்வமே, அது குறித்து நீ வருந்துதல் வேண்டாம். இறைவன் அருளால் அக்காயம் எனக்கு எளிதில் ஆறி விட்டது. அவனுக்கோ நல்ல புத்தி புகட்டினார். அவன் அன்று முதல் காலுடைந்த நொண்டி யாயினன். அவன் பந்தயமும் பாழாய்ப் போயிற்று. என் ஓட்டமும் நடையும் அன்றோடு ஒழிந்துபோயின. அதனால் அவன் என்னை முற்றிலும் வெறுக்கலாயினன். முடிவில் நான் ஒரு செல்வருக்கு விற்கப்பட்டேன்.

அருமைக் குழந்தாய், என் புதிய எசமானர் மிகவும் நல்லவர். அவர் என்னை என்றும் துன்புறுத்திய தில்லை. அங்கே எனக்கு இருந்த வேலையும் மிகவும் சொற்பமே. அவர் என்பொருட்டு ஒருசிறு வண்டி செய்தார். அவ்வண்டியை டாக் கார்ட் (Dog Cart) என்று அழைக்கிறார்கள். அதில் அவர் புதல்வர்களை ஏற்றிக் கொண்டு நான் பாடசாலைக்குச் செல்வேன் ; பின்னர் அவர்களை

வீட்டிற்குக் கொணர்ந்து சேர்ப்பேன். இவைகளே என் வேலைகள். அப்பிள்ளைகளும் என்மீது மிகவும் அன்பாய் இருந்தனர். அவர்கள் என் அருகே வந்து என்னைத் தட்டிக் கொடுப்பார்கள்;




என் உடம்பில் உள்ள மெல்லிய மயிரினைத் தடவிப் பார்ப்பார்கள்; இளம் புற்களைத் தேடிக் கொணர்ந்து என் வாயில் வைப்பார்கள். அப்போது நான் அன்புடன் கனைத்து அவர்களை இன்புறச் செய்வேன்.

—(இன்பமுடன்) அம்மணி, வாய்த்தாலும் இத்தகைய எசமானரன்றோ தங்களுக்கு வாய்க்கவேண்டும்! ஆ! ஆ! என்ன அன்பு! என்ன அருமை! எசமானர் என்னும் பெயருக்கு ஏற்றவர் இவரே. இத்தகைய பெரியோரிடத்து ஊழியம் செய்யினும் அது நமக்கு இனிமையாகத் தோன்றுகிறது. தம் சொந்தப் பிள்ளைகளைப்போல் எண்ணி வளர்ப்பவர் அன்றோ சிறந்த எசமானர்? அம்மா, தங்கள்

துன்பமெல்லாம் அன்றோடு ஒழிந்தனபோலும்! அப்படித் தானே ?

குதிரை—(ஏக்கத்துடன்) இல்லை-இல்லை. என் செல்வக் கண்மணீ, பாவிகட்கு ஆவி போகுமளவும் அல்லல் தானே ? வினையை வெல்ல எவரால் ஆகும் ? நான் செல்லுமிடந்தோறும் அது தொடர்ந்து வரலாயிற்று. என் புதிய எசமானராகிய அச் செல்வர் என் பொருட்டு ஒரு வேலையாளனை நியமித்தார். என் வினைப்பயனே ஓர் உரு வெடுத்து வந்தாலென்ன அவன் அங்கே வந்து தோன்றினன். அவனே ஒரு பெரு மோசக்காரன் சோம்பலே சொரூபமென வந்தவன் ; என் எச மானர் என் பொருட்டுக் கொடுக்கும் கொள்ளில் கால்பாகமேனும் எனக்குக் காட்டமாட்டான் ஒரு நாளைக்குப் போதிய புல்லை ஒன்பது நாளைக்கு வைத்துக்கொள்வான் ; அவர் கொடுக்கும் பண த்தையோ பத்திரமாய்ச் சேமித்துவைத்துவிடுவான் அவன் என்னைத் தேய்த்துக் குளிப்பாட்டுவது அருமையினும் அருமை. இந்த அநியாயங்களை நான் எவரிடம் சொல்லிக்கொள்வேன் ; என மனத்திற்குள் எண்ணி யெண்ணி ஏங்கலா னேன். என் தேகமும் நாளுக்கு நாள் மெ வடைந்து வந்தது. என் எசமானரோ இவைகளை ஒரு சிறிதும் உணரார். அவர் ஒரு நாள், நா இளைத்து வருவதற்குக் காரணம் யாதென அ வேலையாளனை வினவினன். அப்போது அப்ப பாவி, 'சாமி, இது திருட்டுக் குதிரை; இந்தச் சாதி குதிரைகளுக்கு எவ்வளவு கொள் வைத்தாலு

தேகத்தில் ஒட்டுவதில்லை,' என்று பொய் புகன்றான். அவரும் அதனை உண்மையென நம்பித் தம் இருப்பிடம் சென்றார்.

குட்டி—ஐயோ! இது என்ன அநியாயம்! எளிய பிராணிகளாய நம்மையா அவன் வஞ்சிக்கவேண்டும்! அந்த வஞ்சகன் நெஞ்சம் கல்லோ இரும்போ! அம்மா, கடவுளும் அவனுக்குத் துணை செய்தாரே! இது வல்லவோ ஆச்சரியம்!

குதிரை—குழந்தாய், நீ அவ்விதம் எண்ணவேண்டாம்! ஈசன் அவனுக்கும் தக்க தண்டனையே அளித்தார்! என் கண்ணே, மோசம் என்றைக்கும் நாசம் அல்லவா? அவன் வஞ்சகமும் ஒரு நாள் வெளியாகி விட்டது. அச்செல்வரின் புதல்வர்கள் அவன் கள்ளத்தனத்தைக் கண்டு பிடித்து விட்டனர். அப்போது அவனுக்கு விழுந்த அடிகளுக்கோ கணக்கேயில்லை.




அவனும் அன்றே அவ்விடத்தைவிட்டு அகன்று விட்டான். பின்னர் எசமானர், வேறொரு புதிய ஆளை வேலையில் அமர்த்தினர். அவன் உயர் குணம் வாய்ந்த உத்தமன்; கள்ள உள்ளம் சிறிதும் இல்லாதவன்; தன்னைப் போல பிறரையும் பார்க்கும் தூயோன். அவன் என்னை அல்லும் பகலும் அன்புடன் பாதுகாத்து வந்தான்.

அவனது கனிந்த மனமும், இனித்த மொழியும் என்னை இன்புறச் செய்தன. என் தேகமும் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய்ப் பொலிவுற்று விளங்கியது. நான், கண்டோர் வியக்கும் கட்டழகு வாய்ந்து, கவலை யற்றுக் களிப்புற்றிருந்தேன். அப்போதுதான் எனக்குப் பன்னிரண்டாம் வயது பூர்த்தி யடைந்தது.

குட்டி—(இன்பமுடன்) ஆ! ஆனந்தம் — ஆனந்தம். அன்புள்ள எசமானருக் கேற்ற அருமை வேலையாள்! அவன் வேலையாள் அல்லன்; நம்மை வாழ்விக்க வந்த வள்ளல்; நம்மைக் காப்பாற்ற வந்த காவலன்; நாம் கை கூப்பித் தொழும் கடவுள்;— ஆனால் அம்மணீ, அத்தகைய எழில் பெற்றிருந்த தாங்கள், இப்போது இளைத்து உரு மாறி நிற்கக் காரணம் என்ன?

குதிரை—(துயரத்துடன்) ஆ! அது என் தலைவிதி. அவ்விதியை வெல்ல எவரால் ஆகும்! நான் இன்புற்றிருக்க இறைவனுக்கு எண்ணமில்லை போலும். கண்மணீ, என்னைக் கருத்துடன் பாது காத்து வந்த வேலையாள் சில நாட்களுக்கெல்லாம் விண்ணுலகை விழைந்தேகினன். அந்தோ! அவன் இறந்ததின் பொருட்டு நான் எவ்வாறு துயருற்றேன் என்பதை எல்லாம் வல்ல இறைவனேயன்றிப் பிறர் அறியார். நான் ஏழு நாட்கள் வரையில் உணவு கொள்ளாது ஏக்கமுற்றிருந்தேன்; அவன் பிரிவை யெண்ணி யெண்ணிப் பன்னெடு நாட்கள் கண்ணீர் விட்டுக் கலங்கி நின்றேன். ஆ! அத்துன்பம் என்னோடு நிற்பினும்

என் மனம் ஒருவாறு ஆறுதல் அடைந்திருக்கும். 'பட்ட காலிலேயே படும்; கெட்ட குடியே கெடும்,' என்றபடி எனக்கு மற்றுமோர் பெரிய துன்பம் வந்து சேர்ந்தது.—என் அன்புள்ள எசமானர் மீது ஒரு பகையாளி தொடு வழக்கிட்டு அவர் சொத்துக்களை யெல்லாம் தொலைத்தான். அதனால் அவருக்கு வறுமைக் காலம் வந்து விட்டது. எனக்குத் தீனி தந்து காப்பாற்ற அவரால் இயலவில்லை. கடன்காரர் அவரை வந்து சூழ்ந்து கொண்டனர். ஆதலால், அவர் என்னை யாருக்கேனும் விற்றுவிடலாம் என்று எண்ணங்கொண்டார்.

**குட்டி**— ஆ! என்ன கெட்ட காலம்! நல்லவர்கட்கு ஏனோ பொல்லாங்கு நேரவேண்டும்? ஐயோ! நம்பி இருந்த இடமும் நிலையற்றுப் போயிற்றே! இதுவும் நம் தீவினைப் பயனோ! அம்மா! அவர் தங்களை யாருக்கு விற்றார்? பின்னரேனும் தங்கள் வாழ்க்கை சுகப்பட்டதா?

**குதிரை**—ஐயோ! அந்தக் கொடுமையை ஏன் கேட்கின்றாய்? எமனிடத்திலேனும் இன்புற்று வாழலாம்; என்னை விலைக்கு வாங்கிய அந்த வன்கண்ணனிடத்தில் வாழ ஒருவராலும் இயலாது. அக் கொடியோனை யாரென நினைக்கின்றாய்? அவன் கன்னெஞ்சம் படைத்த சண்டாளன்; கொடுந் தொழிலில் தலைசிறந்த பெரும்பாவி; அவன்தான் நம்மை யெல்லாம் ஆட்டிப் படைக்கும் ஜட்கா வண்டிக்காரன்.

குட்டி—அம்மா, இந்த எசமானன்மீது தங்களுக்கு ஏன் இவ்வளவு கோபம் ? இவன் தங்களை அன்புடன் பாதுகாக்க வில்லையா ?

குதிரை—ஆ! இவனா என் எசமானன் ?—இவனா என் எசமானன் ?—நம்மிருவர் உயிரையும் கொண்டு போக விருந்த காலன் ; கருணை யென்பது சிறிதும் இல்லாத கொடியோன். இவனா என்னைக் காப் பாற்றுவான் ? எமபுரத்திற்கு வழிகாட்டுவான்— ஐயோ ! இவனை நினைத்தாலும், என்னெஞ்சம் நடுங்குகின்றதே ! வயிறு பற்றி எரிகின்றதே !— கோபத்தால் மூளை கொதிப்பேறுகின்றதே !—ஆ இந்தப் படுபாவி என்னை விலைகொடுத்து வாங்கி அன்றே, என்னை என்னென்ன பாடுபடுத்தினன் அப்போது நான் கருப்ப முற்றிருந்தேன் ; அ இக்கொடியவன் சிறிதும் கருதினனில்லை. எ ஓட்டத்தைப் பார்க்கவேண்டுமென்று என்னை காட்டிலும் மேட்டிலும் கட்டி யடித்தான். ஐயோ இவனோடு அமையாது, இவன் நண்பர்களைய நான் இச்சமயம் இழுத்துச் சென்றேன். அ களோ இவனினும் கொடிய பாதகர்கள். அவர்க இரைச்சலிட்டுக் கூவி என்னை அலறச் செய்த கள். மூங்கிற் கழிகொண்டு என் முதுகெலும்பை முறியச் செய்தார்கள். அப்போது நான் பட் பாட்டினைக் கேட்கவும் வேண்டுமா ?

ஆ ! என் கண்ணே, அன்றைய நாள் முழுவது எனக்கு ஓட்டமும் நடையும் ஒழிந்தபாடில்லை. ம நாளேனும் இக்கொடியவன் எனக்கு ஓய்வு வான் என்று நான் எண்ணினேன்.—அந்தே

ஈசா ! இப்படுபாவி என்னைக் காலை நான்கு மணிக் கெல்லாம் வண்டியில் கட்டிவிட்டான் ; அன்று மாலை ஆறுமணிவரையில் என்னை வாட்டி வதைத்தான். அன்றைத் தினத்திலிருந்து இரவும் பகலும் ஒன்றாகவே யிருந்தன. வெயிலும் மழையும் என் தலையிலேயே காயும், பேயும். இவன் பணப் பேய்பிடித்த பெரும் பாதகன் ; எங்குச் செல்வதாயினும் இருப்பினும் என்னைக் கட்டி யடிப்பான் ; இவன் 'பணம்' என்றால் பத்துக் காதமும் போவான் ; பகலென்றும் பாரான்—இரவென்றும் எண்ணான் ; என்னை இரையருந்தவும் விடான் ; இளைப்பாறவும் விடான் ; பொருள் சம்பாதிப்பதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருப்பான். இவன்; அப்பாதகப் பந்தயக்காரனையும் பரம யோக்கியனாக்கி விட்டான். அவனோ, ஒரு நாளைக்கு என் உயிரை வாட்டி(60)லும், மற்றைய நாட்களில் என்னை இன்புறச் செய்வான். இச்சண்டாளனிடமோ எனக்கு என்றும் துன்பம் – என்றும் துன்பம் ; உயிர் போகும் வரையில் ஒரே துன்பம். இவன் அவ்வஞ்சக வேலையாளனையும் வென்று விட்டான். அவனோ ஆகாரம் கொடாவிடினும் அல்லல் புரியான். இப்பாதகனிடம் நான் வந்தபின்னரோ என் வயிற்றிற்கும் இரை யில்லை ; வேலையிலும் குறைவில்லை. இக் கொடியவன் ஒவ்வொருநாளும் இரவு எட்டு மணி வரையில் உயிரை வாட்டி விடுவான். சில சமயங் களில் நான் வீட்டிற்குத் திரும்ப மணி பத்தும் ஆகும் ; பன்னிரண்டும் அடிக்கும். இவ்வாறெல் லாம் இப்படுபாவி என்னை ஆட்டிப் படைத்தான்.

(அப்போது குட்டி கண்களில் நீர் வடித்து நி
றது.) என் அருமைக் கண்மணீ, நான் (
கொடியவனிடம் வந்த இரண்டு மாதங்களுக்கு
மிகுதியும் உருமாறி விட்டேன். வண்டிய
இழுத்து, இழுத்து என் கழுத்தும் புண்பட்டு வி
டது. சாட்டை யடியினுல் என் தேக முழுத
தழும்புற்றிருந்தது ; உரோமங்க ளெல்ல
உதிர்ந்து போயின. போதிய உணவின்மைய
என் உடலிலுள்ள தசை வற்றி எலும்புகள் மே
ழுந்து தோன்றின. நான் கண்ணீர் விட்டுக் க
காத நாட்கள் இல்லை ; அக்காலத்து, எண்ணமு
ஏக்கமுமே என் மனத்தில் குடிகொண்டிருந்தன
ஆ ! அன்பே, அப்போது நீ என் வயிற்றில் ஒ
பது மாதக் குழந்தையாய் இருந்தாய். ஆதலா
என் செல்வமே, அச்சமயம் என்னுல் வரு
உழைக்க இயலவில்லை. எனினும் நான் இப்ப
கனுக்கு அஞ்சி, இவன் எண்ணப்படி நட
வந்தேன்.

**குட்டி**—ஐயோ ! தெய்வமே, — என்ன துன்பம்—என்
துன்பம் ! அம்மா, இத்துன்பங்களை யெல்ல
தாங்கள் எவ்வாறு பொறுத்து வந்தீர்கள்
இவைகளை என்னுல் கேட்கவும் இயல வில்லை
அந்தோ !—அந்தோ ! (வருந்துகின்றது.)

**குதிரை**—என் செல்வமே, என் தொல்லை வினைய
மேலும் மேலும் கூறி உன்னைத் துன்புற
எனக்கு விருப்பமில்லை. ஆதலின் இரண்டொ
கூறி நான் என் வரலாற்றை முடித்து விடு
றேன்.

தழந்தாய், நான் ஒரு நாள், காலை முழுவதும் கடுமை யாய் உழைத்து, இரவு எட்டு மணிக்கு வீடு வந்து சேர்ந்தேன். என் எசமானன் என்னைக் கட்டி னின்றும் அவிழ்த்து நெடுநேரமாகவில்லை. அதற் குள் வானம் இருண்டுவிட்டது ; மின்னலும் இடி யும் மாறி மாறித் தோன்றின. சிறிது நேரத்திற் கெல்லாம் காற்றும் மழையும் கலந்தடிக்கத் தலைப் பட்டன. நான் அச்சமயம் களைத்துக் கால் வலியி னால் துன்புற்றிருந்தேன். அன்றியும், நான் அப் போது பூரண கருப்பமுற்று இருந்தமையால், வயிற்று வலியும் என்னை ஒரு புறம் வாட்டத் தொடங்கியது. என்னைக் கட்டியிருந்த கொட்டகை யோ கூறுந் தரமன்று. 'சொட்டு-சொட்டு' என்று விழும் மழைத்துளிகளால் அவ்விடம் முற்றிலும் நனைந்திருந்தது. என் அருகே நீரும் சேறும் நிரம்பி யிருந்தன. என்னால் நிற்கவும் இயல வில்லை ; கீழே படுக்கவும் கூடவில்லை. அப்போது நான், 'ஐயோ ! இனியேனும் சிறிது காலாறலாம் என்று எண்ணினேனே ! கொடிய வயிற்று நோயோடு இந்தப் பாழும் மழையும் எனக்குப் பகையாய் முடிந்ததே !—ஈசா ! நான் இவ்விரவை எவ்வாறு கழிப்பேன்,' என்று பலவாறு எண்ணி யெண்ணி யேங்கிப், பின் என் அருகே இருந்த புல் லில் சிறிது அப்போதுதான் தின்ன ஆரம்பித் தேன்.—ஆ ! நான் என்னென்று சொல்லுவேன் ! அதே சமயத்தில், என் எசமானனாகிய அப்படு பாவி, இரண்டு கொழுத்த ஆட்களை அழைத்துக் கொண்டு என் அருகே வந்தான். அப்போது

அவ்விருவரில் ஒருவன், என் எசமானனை பார்த்து, 'ஐயா, ஒன்றும் சிந்திக்க வேண்டாம் அவசரம்—அவசரம் நீ எவ்வளவு பணம் கே பினும் நாங்கள் தருகின்றோம்; அது குறித்து சிறிதும் சந்தேகம் வேண்டாம். இப்போதே வண்டியைக் கட்டு — நாங்கள் சீக்கிரம் செல்லுத வேண்டும்—ஆகட்டும்—ஆகட்டும்,' என்று ஆ வாரம் செய்து உரைத்தான். உடனே மற்றொரு வன், 'இன்னும் என்ன ஐயா யோசனை? வண்டிக்காரரே, நாளைப் பகல் பன்னிரண்டு மணி கெல்லாம் நாம் இங்கே வந்து விடலாம்; ஒன்று ஆலோசிக்க வேண்டாம்; சீக்கிரம் — சீக்கிரம், என்று படபடப்புடன் கூறினான்.

என் கண்ணே, அப்போது என் மனம் என்ன பா பட்டிருக்கும் என்பதை நீயே எண்ணிப் பா எனக்குக் கோபம் ஒரு புறமும், துக்கம் ஒரு புறமு மேலிட்டெழுந்தன. எனினும், என் எஜமான எண்ணம் இன்னது என்பது எனக்கு அச்சமய தெரியவில்லை. ஆதலால், நான், வேறொன்றிலு சிந்தைவையாது, அவன் முகத்தையே உற் நோக்கிக் கொண்டிருந்தேன். என் எசமான சிறிது நேரம் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தா பின்னர் வானத்தை நோக்குவதும் என் உற்றுப் பார்ப்பதுமாய் இருந்தான். அப்போ அப்புதியவரில் ஒருவன் தன் பணப்பை அவிழ்த்து, ஒரு காகிதச் சுருளை அவனிடம் தந் 'ஐயா, இதனை முன் பணமாக வைத்துக்கொ பின்னர்ப் பார்த்துக்கொள்ளலாம். தாமதம் செ

வேண்டாம். நாங்கள் இரண்டே பேர்தாம்; ஒன்றும் சிரமமில்லை; சீக்கிரம் புறப்படு,' என்று அவசரத்துடன் உரைத்தான். பொருட்பேய் பிடித்த அப்புல்லறிவாளன் பணத்தைப் பார்த்ததும்




பூரித்துவிட்டான். எண்ணமும் ஏக்கமுமாய் இருந்த அவன் ஓட்டமும் நடையுமாய்ச் சென்று வண்டியை இழுத்து வந்து என் முன்னே நிறுத்தினான். ஆ! அப்போது என் வயிறு 'பகீர்' என்று பற்றி எறிந்தது; உள்ளம் துடி துடித்தது; தேகம் சிலிர்த்தது; கோபம் கொதித்தெழுந்தது; நான் சிறிது நேரம் உறுமித் தலையை அசைத்தேன்; என் கால்களால் நிலத்தை உதைத்தேன்; என் வாலை நாற்புறமும் சுழற்றி வீசினேன்—என் செல்வமே, இவைகளே யன்றி என்னால் வேறு யாது புரிய இயலும்? ஒரு சிறிதும் இயலாது—இயலாது. ஆதலால் குழந்தாய், நான் மனங்

கலங்கிச் செயலொழிந்து சோர்வுற்று நின்றேன் கல்லினும் வலிய அவன் நெஞ்சம் என் நிலைமை யைக் கண்டு சிறிதும் இரங்கிற்றில்லை; அக்காற்று மழையைக் கண்டும் கலங்கிற்றில்லை. அப்ப( பாவிக்கு அச்சமயம் பணமே பெரிதாய் இருந்தது ஆதலின், அக்கொடியவன் என் தலையிலும் கழு திலும் ஏதேதோ கொண்டுவந்து மாட்டினான் ஏங்கி யிளைத்திருந்த என்னை இழுத்துச் சென்று வண்டியில் பூட்டினான்; அவ்விருவரையும் ஏற்றி கொண்டு நள்ளிருளில் என்னை ஓட்டினான். நா விளைப்பயனை எண்ணி வருந்தி வண்டியை வலி துச் சென்றேன்.

குழந்தாய், அவ்வண்டியில் ஏறியவர்கள் இரண்டு பே களே யெனினும், அவர்கள் ஐந்து ஆட்களுக்கு சமமான பாரமுடையவர்களாய் இருந்தனர். அ கள், தங்களோடு அமையாது, இரண்டு கனத் இருப்புப் பெட்டிகளையும் ஒரு பெரிய பொ மூட்டையினையும் ஏற்றிக் கொண்டனர். சேறு நீரும் நிறைந்திருந்த அவ்வழியில் நான் அ வண்டியை இழுத்துச் செல்லுங்காலத்து, எ கழுத்து முறுந்து விடும் போலிருந்தது. ' வென்று சத்தமிட்டுப் பொழியும் கனத்த மழையி லும், 'சில்' லென்று வீசும் குளிர்ந்த காற்றினு என் தேகம் நடுக்கமுற ஆரம்பித்தது. மழை நீ பெருக்கோ, பல இடங்களில் என் முழங்காலு மேலும் ஓடிற்று. என் செல்வமே, பூரண கருப் வாய்ந்த நான் எவ்வாறு துன்புற்றிருப்பேன் எ பதை நீயே சிறிது உன்னிப்பார். ஆ! அப்பே

நான் பட்டபாட்டினை இப்போது நினைத்தாலும் என் நெஞ்சம் நடுங்குகின்றது. வண்டியில் இருந்த அவ்விரு தடியர்களோ, நான் வேகமாய்ச் செல்லவில்லை யென்று தங்களுக்குள் முணு



முணுத்துக் கொண்டார்கள். என் எசமானனாகிய அக்கொடும் பாவியும், அவர்களை இன்புறச் செய்யும் பொருட்டு, மழை யென்றும் பாராமல், என் நிலையையும் நோக்காமல், அடித்து அடித்து என்னை ஓட்ட ஆரம்பித்தான். நான், என் கண்களில் நீர் வடித்தவண்ணம், ஓயாப் பெருமழையில் அப்பாதகர்களை வலித்துச் சென்றேன்.

நீட்டி—ஆ! அம்மா, என்ன கொடுமை இது! அவ்வண்டியில் ஏறிய அவர்களும் வன்னெஞ்சர்களாகவா இருத்தல் வேண்டும்? அம்மணி, அசுவன் இத்துணைத் துன்பங்களையும் கண்டு எவ்வாறு சகித்திருந்தான்? ஐயோ! அப்படுபாவிகளை ஒருவர் ஒன்றும் செய்யவில்லையா?

குதிரை—என் கண்மணீ, கடவுளின் கருணை அவ்வா றிருப்பின் அதற்கு நாம் யாதுசெய்வது ? ஐயோ ! அக்கொடியவர்களிடம் நான் பட்டபாடு கொஞ்ச மல்ல.—என் செல்வமே, நான் அவ்வண்டியை இழுத்துக் கொண்டு, காற்றையும் மழையையும் கருதாமல், பெருநடைகொண்டு, நான்கு கல்தூரம் நடந்து சென்றேன். பின்னர், மனித சஞ்சாரம் சிறிதும் இல்லாத காட்டு வழியில் நான் நடக்க வேண்டிவந்தது. அவ்வழியோ முழுதும் மேடும் பள்ளமுமாய்க் காணப்பட்டது. ஆதலால், குழந் தாய், என்னைப் பூட்டியிருந்த அவ்வண்டி அடிக்கடி சேற்றில் அழுந்த ஆரம்பித்தது. அக்காலங்களில் நான் அதனை இழுத்துச் செல்வதற்குப் பெரிதும் துன்புற்றேன். அச்சிரமத்தின் மிகுதியால் எனக்கு வயிற்று நோய் அதிகரித்துவிட்டது ; பெருமூச்சு மேலிட்டது ; கண்ணீர் பெருக்கெடுத்தது ; வாயி லும் நுரைதள்ளலாயிற்று.

என் அன்பே, நான் இவ்விதம் சிறிது தூரம் மெல்ல மெல்ல நடந்து சென்றேன். இதற்குள் அ வண்டி ஓர் ஆழ்ந்த சேற்றுக்குழியில் அழுந் விட்டது. அப்போது நான் அதனை வலித்து செல்ல இயலாதவாறு, அவ்விடத்திலே நிலைத்து நின்றுவிட்டேன். அதுகண்ட எசமான என்மீது வெகுண்டு என்னைப் 'பளீர்-பளீர்' என் சாட்டைகொண்டு வாட்டினன். நான் அக்கொ மைக்கு அஞ்சி, ஆற்றொணாத் துயரத்துடன் எ முழுபலத்தையுங் கொண்டு அதனை இழுக்க முய றேன். நான் அவ்வாறு புரிந்ததனால் அவ்வண்

யின் சக்கரம் ஒன்று 'மள-மள' வென்று முறிய, வண்டியும் சேற்றில் சாய்ந்தது. அப்போது என் எசமானன் நிலத்தில் எழும்பிக் குதித்துக் காலில்



காயமடைந்தான். வண்டியில் ஏறி வந்த அவ் விருவரும் ஒருவர்மேல் மற்றொருவராக விழுந்து முடிவில் சேற்றில் குப்புறக் கவிழ்ந்தனர்; அவ் விருப்புப் பெட்டிகளும், பொதி மூட்டையும் அவர் கள் தலைமேல் விழுந்தன. அப்போது அவர்கள் 'ஐயையோ! — என்று அலறிக் கூவினர். அவர் கள் இட்ட கூக்கரல் எனக்கு மிகுதியும் அச்சத்தை விளைவித்தது. ஆதலால், நான் அதிக மருட்சி யடைந்து என்னைப் பிணித்திருந்த வாய்ப்பட் டையை அறுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தேன்.

ழந்தாய், அப்போது எனக்கு வயிற்று நோய் மிகுந்திருந்தமையால் என்னால் நெடுந்தூரம் செல்ல இயலவில்லை. நான் சிறிது நேரத்திற் கெல்லாம் ஓர் ஆலமரத்தின் அடியில் வந்து

தங்கினேன். அப்போது எனக்குக் களேட் மேலிட்டிருந்தது. எனினும் என் வயிற்று நோ மட்டில் சிறிதும் குறைந்தபாடில்லை. நான் அ விடத்திலேயே நெடுநேரம் வயிற்று நோயா வருந்தலாயினேன்.

குட்டி— துன்பம்—துன்பம்! தாயே, இத்துணைத் து பங்களையும் தாங்கள் அநுபவிக்க நேர்ந்தே ஐயோ! இதனை நான் கதையிலும் கேட தில்லையே! அம்மணீ, அப்பாதகர்கள் பின்னர் எ வாருயினர்? அதனைச் சொல்லுங்கள்.



குதிரை :—கண்ணே, வண்டியில் ஏறிவந்த அவ் வரும் எவ்வாறு தங்கள் வீடுபோய்ச் சேர்ந் ரென்பது எனக்குத் தெரியவராது. மறுநாள் ஐந்துமணியிருக்கும்; அடிபட்டு நிலத்தில் விழ என் எசமானன் என்னைக் கண்டு பிடி

பொருட்டு மெதுவாக அவ்வழியே வந்துகொண் டிருந்தான். அவன் அருகே வந்ததும், நானும், என் அருமைக் குழந்தையாகிய நீயும் அவ்வால மரத்தின் அடியில் அமர்ந்திருத்தலைக் கண்டு அதிசயித்தான்.

குட்டி—(ஆச்சரியத்துடன் அம்மணி, நான் அப்போதா பிறந்தேன்! அது எனக்குச் சிறிதும் நினைவில் இல்லை அம்மா!

குதிரை—ஆம்; கண்மணி, நீ சிறு குழந்தையாய் இருந்ததால் அஃது உனக்கு நினைவிராது. என் செல்வமே, என் நல்ல காலம்—அச்சமயம் அவன் என்னைச் சிறிதும் துன்புறுத்தவில்லை. சிறு குழந்தையாகிய உன்னை அவன் தன் தோளின்மீது வைத்துத் தூக்கிக் கொண்டு வந்தான். நான் அவன் பின்னால் நடந்து வந்தேன். இவ்விதம் நாம் வீடு வந்து சேர்ந்ததும் நம் எசமானனுக்குச் சுரநோய் கண்டுவிட்டது. நான் அன்று முழுதும் ஓய்வாகவே யிருந்தேன். நம் எசமானனுக்கு மேலும் மேலும் அச்சுரநோய் அதிகரிக்கத் தலைப் பட்டது. ஆதலால், நான் சில நாட்கள் வரை ஓய்வாக இருக்கவேண்டி வரும் என்று எண்ணி னேன். ஆனால், என்னை அவ்வாறு விட்டுவைக்க அக்கொடியோனுக்கு எண்ணமில்லை. உடைந்து கிடந்த அவ்வண்டியை அவன் எவ்விதமோ ஓர் ஆளைக்கொண்டு அன்றை மறுநாளே சரிப்படுத்தி விட்டான். அடுத்த நாள் அப்பாவி, நான் இளைத் திருத்தலையும் கருதாது என்னை ஒரு வண்டியாள னுக்கு ஒப்பித்துவிட்டான். அவனோ கொடியவன்!

கொடியவன்! அவனிடம் நான் பட்ட துன்பங்கள் எண்ணுதற் கரியன.




என் கண்ணே, அன்று காலே, கூலியாளனுய அக் கொடியோன் என்னே வண்டியில் பூட்டுதற்கு ஆரம்பித்தான். அப்போது, சிறு குழந்தையாய நீ மிக்க அவாவுடன் பால் உண்ண ஓடி வந்தாய். அது கண்ட அக்கொடும்பாவி உன்னேக் குழந்தையென்றும் கருதாது உன் காதைப் பிடித்து இழுத்து, உன்னேக் காலால் உதைத்து நிலத்தில் தள்ளினுன். அந்தோ! அப்போது நீ எழுந்திருக்கவும் இயலாது அவ்விடத்திலேயே அழுத வண்ணம் கிடந்தாய்.

குட்டி—(கோபத்துடன் அம்மா, அந்தத் துன்மார்க்கன் என்னை அப்படியாசெய்தான்! ஆ! இப்போது அகப் பட்டால் அவனை நான் உதைத்துக் கடித்துக் கொன்று போடுவேன்.




குதிரை — என் கண்ணே, நீ கோபங்கொள்ள வேண்டாம். மானிடரிடத்து நம் கோபம் செல்லாது. ஏனெனில், அவர்கட்கு நாம் அடிமைப்பட்டிருக்கின்றோம். அடிமைகளாகிய நமக்கு, மானமும் கோபமும் அளவிலா அல்லலைத் தரும். உண்மையும், உழைப்பும், அறிவும், அமைதியுமே நமக்குத் துணையானவை. என் செல்வமே, அக்கொடியோன் உன்னைத் துன்புறுத்திய காலத்து எனக்குண்டாய துயரத்தை, எல்லாம்வல்ல இறைவனே அறிவார். அக்கூலியாளன் என்னை வண்டியில் பூட்டியதும், தன் சாட்டையைக் கையில் எடுத்துக் கொண்டான், அதிலிருந்து அப்பாதகன் என்னை அடித்த அடிகளுக்கோ கணக்கு வழக்கில்லை. அக்கொடியவன் என்னை ஓர் உயிருள்ள பிராணியெனச் சிறிதும் எண்ணினனில்லை. நான் பணம் சம்பாதித்துத் தரும் ஓர் இயந்திரம் என்பது அவன் எண்ணம் போலும்! அவனுக்கோ வண்டியோ

டும் வகையே தெரியவில்லை. என்னை வாட்டி
வதைத்தல் மட்டும் அவனுக்கு மனப்பாடமா
இருந்தது. நான் வேகமாய் ஓடவேண்டுமென
னும், அசைவற்று நிற்க வேண்டுமெனினும்
திரும்பிச் செல்ல வேண்டுமெனினும் — எதற்கு
அடி கொடுத்தலையே அவன் பெருந் தொழிலாக
கொண்டான். நான் அச் சண்டாளன் என்
ணத்தை அறிந்து அதன்படி நடப்பதற்கு அ
னிடம் மிகுதியும் துன்பப்பட்டேன்.—அந்தோ
அக் கொடியவன் என்னை இவ்வளவோடேனு
விட்டானு ? அன்று மாலை நான்கு மணிக்கெ
லாம் அவன் என்னை ஒரு பெரும் படுகுழியி
தள்ளி என் முன்னங் கால்களைக் காயப்படுத்
ஞன். அக்காயம் என்னுல் நடக்க முடியாத அ
வளவு பெரிதாக இருந்தமையால், அவன் என்ன
அப்போதே வீட்டிற்கு ஓட்டி வந்துவிட்டான்.

நான் காய முற்றிருத்தலைக் கேள்வியுற்ற நம் எசமான
தன் படுக்கையை விட்டு விரைந்து ஓடிவந்தான்
என் நிலைமையைக் கண்டதும், 'ஐயோ! வரும்ப
வாயில் மண்விழுந்துவிட்டதே!' என்று மன
பதைத்தான் ; முகம் சுளித்தான் ; பற்களைக் கடி
தான் ; பின்னர், அவன் கோபத்துடன் தன் எதி
நின்றிருந்த அக்கூலியாளனை, வாயில் வந்தவா
இழித்துரைத்தான். அதுகண்ட அக்கூலியாளனு
சினமடைந்து அவனைப் பதிலுக்கு இகழ்ந்துரை
தான். அதனுல், அவ்விருவருக்கும் சண்டை
மூண்டது. சிறிது நேரத்திற்கெல்லாம் அந்
வாய்ச்சண்டை கைச்சண்டையாக மாறியது. ந

எசமானன், தன் சுரநோயையுங் கவனியாது அக்கூலியாளனை நிலத்திலே தள்ளிப் புரட்டிப் புரட்டி உதைத்தான். அக்கூலியாளனும் தேக பலத்தில்



குறைந்தவ னல்லன். ஆதலால், அவன் சிறிது நேரத்திற்குள் நம் எசமானனைக் கீழே புரட்டித் தள்ளி, அவன் மூக்கின் மீதும், வாயின் மீதும் பல

முறை ஓங்கிக் குத்தினன். இவ்விதம் அவ்விரு வரும் சிறிது நேரம் கட்டிப் புரண்டனர்.

குட்டி — அம்மா—அம்பா, பேஷ்—பேஷ்! இருவருக்கு தக்க தண்டனையே கிடைத்தது. தாயே, அ போது தங்களுக்கு மிக்க சந்தோஷமாய் இரு திருக்கும் அல்லவா?



குதிரை — இல்லை; இல்லை. கண்மணீ, எனக்கு துக்கமே மேலிட்டிருந்தது. 'ஐயோ, என் பொருட்டல்லவா இவ்விருவரும் இவ்விதம் கட்டிப் புரண்டு துன்புறுகின்றனர்கள்? என்று நான் அச்சமயம் எண்ணினேன். என் செல்வமே இவர்கள் சண்டையிட்டுக்கொண்டிருக்கையில் அ வழியே செல்லுவோர் அங்கே வந்து சூழ்ந் கொண்டனர். அவர்களில் சிலர் அவ்விருவரையு விலக்கிச் சண்டையை நிறுத்தினர். அப்போ என் எசமானனுக்கு மூக்கிலும் வாயிலும் இரத்த வடிந்திருந்தது. அக்கூலியாளனுக்கும் தேகத்தி

பல இடங்களில் காயம் காணப்பட்டது. அவன் அதனோடு அவ்விடத்தை விட்டு அகன்றான். நம் எசமானனும் தன் வீடு போய்ச் சேர்ந்தான்.

என் செல்வமே, இரண்டொரு நாளில் நம் எசமானனுக்குத் தேகம் குணமடைந்துவிட்டது. நானோ என் முன்னங் கால்களில் நேர்ந்த காயத்தால் அப்போது மிகுதியும் துன்புற்றிருந்தேன்; இரவும் பகலும் எனக்கு உறக்கம் என்பதே இல்லாதிருந்தது. இதை அக் கொடும்பாவி சிறிதும் கருதினானில்லை. இந்நிலையிலும் அவன் என் மூலமாகப் பொருள் சம்பாதிக்க வேண்டும் என்றே எண்ணங் கொண்டான். ஆதலால், அக்கொடியவன் என்னை அன்று இரவு எட்டு மணிக்குமேல் வண்டியில் பூட்டி வீதிவழியே ஓட்டிச் சென்றான். அப்போது, புகைவண்டி ஏறி வெளியூர்க்குச் செல்லவேண்டி, கனத்த சாமான்களோடும், இரு கைக்குழந்தைகளோடும், ஆண்களும் பெண்களுமாக ஐந்துபேர் வந்து அவ்வண்டியில் ஏறினர். இவ்வளவு பாரத்தினையும் ஏற்றிச் செல்லுதற்கு முதலில் இவன் சிறிது மனந் தயங்கினான். ஆனால், அவர்கள் பொருள் மிகுதியாய்க் கொடுக்கச் சம்மதிக்கவே இந்தப் படுபாவி அவர்களை ஆனந்தத்துடன் ஏற்றிக்கொண்டு என்னை அடித்தடித்து ஓட்ட ஆரம்பித்தான். நான், நோயின் துன்பம் பொறுக்கலாற்றாது, கண்ணீர் வடித்தவண்ணம் இறைவனை வேண்டிக் கொண்டே மெதுவாக நொண்டி நடந்தேன்.

இவ்விதம் நான் பத்தடி தூரமேனும் நடந்திருக்கமாட்டேன் ; அப்போது நம் எசமானனுக்குப் பகைவனுய அக்கூலியாளன் வேறொரு வண்டியை ஓட்டிக் கொண்டு அவ்வழியே வந்தான் ; அவன் என்காயத்தையும், வண்டியில் மனிதர்கள் அதிகப் பட்டிருத்தலையும் கண்டுவிட்டான். உடனே அக் கூலியாளன் தன் வண்டியை அதிவேகமாக எங்கோ ஓட்டிச்சென்ருன்.—என் கண்ணே, என்




நல்லகாலம் போலும் ! அவன் சிறிது நேரத்திற் கெல்லாம் 'பைரி' என்னும் பெயர் பூண்ட அரசாங்க உத்தியோகஸ்தர் ஒருவரைத் தன் வண்டியில் ஏற்றிக் கொண்டு மிக்க வேகமாய் என் அருகே ஓட்டிவந்து அவரை இறக்கினுன். அந்த அதிகாரி, என்காயத்தையும் வண்டியில் அதிக மனிதர் ஏறியிருத்தலையும் கண்டு, மிக்க கோபத் துடன் விரைந்து வந்து நம் எசமானன் என்னை ஓட்டிச் செல்லாத வண்ணம் என் வார்ப் பட்டையை இறுகப் பிடித்துக் கொண்டார்.

நட்டி—அம்மா, அந்தப் 'பைரி' என்பவர் யார் ? அவர் ஏன் அவ்வாறு செய்தல் வேண்டும் ?

நதிரை—கண்மணீ, இந்த வண்டிக்காரர்கள் நம்மைத் துன்புறுத்துவதைக் கண்டு இரக்கங் கொண்ட அரசாங்கத்தார் சில அலுவலாளர்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்களை மக்கள் 'பைரி' என்று அழைக்கின்றார்கள். எந்த வண்டிக்காரனேனும் நம்மை வருத்தினாலும், நான்கு பேர்களுக்குமேல் வண்டியில் ஏற்றிக்கொண்டு சென்றாலும், நாம் நோயாய் இருக்குங் காலத்து நம்மை வண்டியில் கட்டியடித்தாலும் அவர்கள் அவனைப் பிடித்துக்கொள்வார்கள். பின்னர், அரசாங்கத்தார் அந்த வண்டிக்காரனுக்கு அபராதம் விதிப்பார்கள்.

...காபாதகனாகிய நம் எசமானன், அந்தப் பைரிகளுக்குப் பயந்தே, அன்று இரவு எட்டு மணிக்குமேல் என்னை வண்டியில் கட்டினான். ஏனெனில் அப்போது அவர்கள் அநேகமாய் வீட்டிற்குத் திரும்பி விடுவார்கள். இக்கூலியாளனுக்கு நம் எசமானன் மீது பகையிருந்ததால், அவன் எப்படியோ அச்சமயம் அவ்வலுவலரைக்கண்டு பிடித்து, அவரைத் தன் வண்டியில் ஏற்றிக் கொண்டு விரைந்து வந்தான்.

...ன் செல்வமே, நம் எசமானன் அந்த அலுவலாளரைக் கண்டதும் உடல் நடுங்கினான் ; உடனே வண்டியினின்றும் கீழே குதித்து, அவரிடம் கெஞ்சிக் கூத்தாடிப் பார்த்தான் ; கைகூப்பித்

தொழுதான் காலில் விழுந்து வணங்கினன்; வயிற்றைக் காட்டினன்—வாயைக் காட்டினன் அவருக்குப் பரிதானம் (லஞ்சம்) கொடுப்பதாகவு அவரிடம் சொல்லிப் பார்த்தான். அவர் மிகவு உத்தமராக இருந்ததால் எதற்கும் சம்மதிக் வில்லை.

பின்னர் அவர், என்னையும், நம் எசமானனையும் காவ நிலையத்துக்கு இழுத்துச் சென்றார். நான் அன் இரவெல்லாம் அங்கேயே இருந்தேன். நம் எ மானனுக்கு அரசாங்கத்தார் ஐம்பது ரூப அபராதம் விதித்தார்கள். இவ்வளவு பெரி தொகை தனக்கு அபராதமாக விதிக்கப்படும் என் அவன் முதலில் எண்ணவேயில்லை. ஆதலால் இதைக் கேள்வியுற்றதும் நம் எசமானன் வா லும் வயிற்றிலும் அடித்துக் கொண்டான். பிற அவன் பலரிடத்தும் சென்று, பொருள் கட கேட்டு, என்னை மீட்டுக்கொண்டு போனன்.

நாங்கள் திரும்பி வீட்டிற்கு வரும்போது அக்கூ யாளன் எங்களைத் தற்செயலாய்க் காணநேர்ந்த அப்போது அவன், மிக்க துயரத்தோடு என் ஓட்டிக்கொண்டு வரும் நம் எசமானனை பார்த்து நகைத்தான். அது நம் எசமானனுக் அளவில்லாக்கோபத்தைவிளைவித்தது. ஆதலா அவன் திடீரென வண்டியினின்றும் எழும்பி குதித்து அக்கூலியாளன் முகத்தின்மீது குத் னன். அப்போது, அவனும் கோபங்கொண் தன் வண்டியினின்றும் கீழே குதித்து, நம் எச

னை அடிப்பதற்கு முயன்றான். உடனே இருவரும் அங்கே கட்டிப்புரள ஆரம்பித்தனர். இவ்வேடிக்கையைப் பார்க்கச் மக்கள் வந்து அவ்விடத்தே சூழ்ந்து கொண்டனர். அக்கூலியாளன் நம் எசமானனைப் பலமுறை புரட்டிப்புரட்டி உதைத்தான். நம் எசமானன் அப்போது நோயால் உடல் மெலிந்திருந்தானாதலால் அக்கூலியாளனைத் திரும்பிப் புரட்டி உதைக்க அவனால் இயலவில்லை. அதற்குள் அருகே நின்றிருந்த சிலர் அவ்விருவரையும் விலக்கிச் சண்டையை நிறுத்தினர். நம் எசமானனுக்கு அப்போது பலத்த காயங்கள் நேர்ந்திருந்தன. ஆதலால், அவனுக்குச் சிறிதும் கோபந் தணியவில்லை ; தன் காயங்களைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு மனம் பதைத்தது ; கோபம் மேலும் மேலும் அதிகரித்தது. உடனே அப்படுபாவி தன் சட்டைப் பையில் வைத்திருந்த கூரான கத்தியொன்றை விரைந்தெடுத்துச் 'சரே'லென்று அக்கூலியாளன் தொண்டையில் ஓங்கிக் குத்தினான். அச்சமயம் அக்கூலியாளன் அதற்கு முன்னர் நடந்தவற்றை அங்குள்ளோர்க்குக் கூறிக்கொண்டிருந்தான். ஆதலால், நம் எசமானன் எண்ணிய கொடுஞ் செய்கையை ஒருவரும் கவனிக்க இடம் இல்லாதிருந்தது. திடீரெனக் கத்தியால் குத்தப்பட்ட அக்கூலியாளன் 'ஓ' வென்றலறி நிலத்தில் விழுந்தான். நம் எசமானனோ அக்கணமே ஓட்டம் பிடித்தான். அருகே நின்றிருந்தோர்களில் சிலர், 'அவனைப் பிடியுங்கள் — அவனைப் பிடியுங்கள்' என்று பின் தொடர்ந்தனர். அவன் கத்தியோடு

ஓடியதால் ஒருவரும் அவனைப் பிடிக்க முன் வர
வில்லை. அப்பாதகன் அதிவேகமாய்ச் சென்று
எங்கேயோ மறைந்து விட்டான்.

கூலியாளன் அறிவிழந்து நிலத்தில் விழுந்து கிடந்
தான். இரத்தம் ஆருகப் பெருகிக்கொண்
டிருந்தது. இதற்குள் போலீஸ் அதிகாரிகள்
அவ்விடத்தே வந்து சூழ்ந்து கொண்டனர்
அவர்கள் அங்கு நடந்ததைக் குறித்து அங்குள்
ளோரிடம் விசாரித்துக் கொண்டிருந்தனர். நான்
மெதுவாய் அவ்வண்டியை இழுத்துக் கொண்டு
வீடு வந்து சேர்ந்தேன். நான் அவ்வாறு செல்லு
தலை ஒருவரும் கவனிக்கவில்லை. ஏனெனில், அங்
குள்ளோர்கள் தரையில் கிடந்த அந்தக் கூலி
யாளனிடமே சூழ்ந்து கொண்டிருந்தனர்.

நான் தனியே வருதலைக்கண்ட நம் எசமானன் மனைவி
ஒன்றும் தெரியாது திகைக்கலாயினள். அதற்குள்
அங்கே சிலர் ஓடிவந்து, நடந்த வரலாற்றை
யெல்லாம் கூறிப் பின்னர், அக்கூலியாளன்
இறந்து விட்டான் என்றும் இயம்பினர். இதை
கேட்டதும் நம் எசமானன் மனைவி தன் கண
னுக்கு யாது தீங்கு நேருமோ எனப் பதைபதைத்
தனள் ; தன் கணவன் எங்குச் சென்றிருப்பான்
என்று ஆலோசிக்கத் தொடங்கினள். அத்தருணத்
தில் சில போலீஸ் உத்தியோகஸ்தர்கள் அங்கு
வந்து வீட்டிற்குள் நுழைந்து நம் எசமானனை
தேட ஆரம்பித்தனர். அங்கு அவன் அகப்படாமை
யால் அவன் மனைவியினிடம் அவர்கள் ஏதேதோ
வாக்கு மூலங்கள் வாங்கினர்.

என் கண்ணே, இவ்விதம் அன்றைத்தினம் கழிந்தது. நம் எசமானனைக் கண்டுபிடித்தற்குப் போலீஸ் அதிகாரிகள் பல விடங்களிலும் தேடித் தேடித் திரிந்தனர். மறுநாள் காலை பத்து மணியிருக்கும். அப்போது ஒருவன் ஓடிவந்து நம் எசமானியைக் கண்டு மிக்க துயரத்தோடு, 'அம்மா' நான் என்னென்று சொல்வேன்! நம் ஊருக்குப் புறத்தே உள்ள இலுப்பைத் தோப்பின் பாழ்ங்கிணற்றில் ஏதோ ஒரு பிணம் மிதக்கின்றது. என்று கேள்வியுற்ற போலீஸ் அதிகாரிகள் அங்கே விரைந்து சென்றார்கள். அப்போது, நானும் அவர்களோடு சென்றிருந்தேன். போலீஸ் அதிகாரிகள் அங்குள்ளோரைக் கொண்டு அப்பிணத்தை வெளியே எடுத்தார்கள். ஐயோ! என்ன அநியாயம்! அஃது உன் கணவன் தேகமாக இருந்ததம்மா! என்று அவசரத்துடன் உரைத்தான். இதைக் கேட்டதும் நம் எசமானி 'ஓ' என்று அலறி, வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு, அவனோடு விரைந்தோடினாள்.

குட்டி—ஐயோ பாவம்! அவன் கதி இப்படியா முடிந்தது! — தாயே, அவன் தங்களுக்குப் புரிந்த கொடுமைகளே முடிவில் அவனுக்கு ஓர் எமனாய் உருவெடுத்து வந்தன போலும்! அஃது எவ்விதமிருப்பினும் கவலையில்லை அவன் ஒழிந்தான்; அவன் ஒழிந்தான் அம்மா, ஆனால், தாங்கள் ஏன் என்னிடம் அப்போது இவைகளை யெல்லாம் கூறவில்லை?

குதிரை—என் கண்ணே, நீ கேட்பது நியாயமே
ஆனால், நீ அப்போது இவைகளையெல்லா
உணரும்படியான பருவத்தில் இல்லை; இவை
களைக் கூறுதற்குப் போதிய ஒழிவும் எனக்கு
வாய்க்கவில்லை; அவ்விதம் கூறி உன்னைத் து
ரத்தில் மூழ்க வைக்கவும் அப்போது எனக்கு
எண்ணமில்லை.—

குழந்தாய், நம் எசமானன் கொடியவனே யெனினு
அவன் இறந்தது எனக்குத் துன்பத்தையே விளை
வித்தது, நம் எசமானியின் துயரமும், அவளு
நிராதரவான நிலையும் என் மனத்தைப் பெரிது
வாட்டின. என் அன்பே, இறந்துபோன நம் எ
மானன் பணப்பேய் பிடித்த பெரும் பித்தன்
ஆகையால், தானும் உண்ணமல், பிறர்க்கு
கொடாமல் வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி
சேர்த்து வந்த பொருள்களை அவன் வட்டிக்
ஆசைப்பட்டுக் கைப்பதிலாகப் பலரிடம் கொடுத்
வைத்திருந்தான். அவன் இன்னின்னரிடம் பண
கொடுத்திருந்தான் என்பது நம் எசமானிக்கு
தெரியாதாகையால், அவர்களில் ஒருவரும் அ
பணத்தைத் திருப்பிக் கொடுக்கவில்லை. இறந்
போன அவனுக்கு ஈமக் கடன் முடித்தற்
அவளிடம் போதுமான பொருளில்லை. ஆதலா
அவள், நம் இருவரையும் யாருக்கேனும் விற்
விடவேண்டும் என்று எண்ணங் கொண்டா
ஆனல், நான் என் காலில் காயத்தோடு மிக
உருமாறி இளைத்திருந்த படியாலும், நீ இள
குழந்தையாய் இருந்தபடியாலும், நம்மிருவரை

அதிக விலை கொடுத்து வாங்க ஒருவரும் முன்வர வில்லை.

என் ஆருயிரே, இவ்விதம் இரண்டு மூன்று நாட்கள் கழிந்தன. அப்போது நல்ல வெயிற் காலம். புற் கட்டின் விலையும் அதிகரித்து விட்டது. வேலையின்றிக் கொட்டகையில் கிடக்கும் எனக்கு மிக்க விலை கொடுத்துப் புல் வாங்கிப் போடுதற்கு நம் எசமானிக்குப் போதிய பொருள் இல்லை. ஆதலால், நான் அன்று முழுவதும் பட்டினியாகவே கிடந்தேன். பசியின் கொடுமையால் நான் அன்று இரவு முழுதும் உறக்கமின்றி வருந்தினேன். சிறு குழந்தையாகிய நீயும், பால் அருந்தவேண்டி என்னை யொருபுறம் வருத்திக் கொண்டிருந்தாய்.

மறுநாள் காலை ஐந்து மணி யிருக்கும், பசியோ பொறுக்க முடியவில்லை. வெளியே சென்றால் அங்குள்ள இலை தழைகளையேனும் சிறிது அருந்திப் பசியாறலாம் என்னும் எண்ணத்துடன் நான் என்னைப் பிணித்திருந்த கயிற்றைப் பலமாய் இழுத்துப் பார்த்தேன். என் நல்ல காலம்! அக்கயிறு எளிதில் அறுந்து போயிற்று. நொண்டிக் கொண்டே, நான் மெதுவாய் என் கொட்டகையைவிட்டு வெளியே வந்தேன். அது கண்ட நீயும் என்னிடம் பால் பருகுதற்கு என்னைப் பின் தொடர்ந்தாய். நான் வெளியே வந்ததும், ஆகாரத்தின் பொருட்டுச் சிறிது தூரம் மெல்ல நடந்து சென்றேன். என் கெட்ட காலம், அப்போது ஒரு பச்சிலையும் தென்படவில்லை. ஆதலால், நான் அதற்கு அடுத்த வீதிக்குச் செல்ல எண்ணங்

கொண்டேன். நீயும் அதுபோழ்து என்னைப் பி
தொடர்ந்தே வந்தாய்.

நான் அத்தெருவில் பாதி வழி சென்றும் அங்
ஒன்றும் அகப்படாமையால், வீட்டுக்குத் திரும்பு
நோக்கத்துடன் சிறிது நேரம் அவ்விடத்
திகைத்து நின்றேன். அப்போது ஓர் உலர்ந்
வாழை யிலை என் கண்ணில் பட்டது. நான், அ
யேனும் சிறிது சுவைத்துப் பார்க்கலாம் என்
எண்ணத்துடன் அருகே சென்று அதனை மோந்
பார்த்தேன் ; அது தின்பதற்குச் சிறிதும் பக்கு
மின்மை கண்டு ஏக்கத்துடன் தலை நிமிர்ந்தே
என் நல்லகாலம்! அப்போது ஒரு பெரியவர் எ
எதிரே நின்றுகொண்டிருந்தார். நான் அவரை
பார்த்தபோது என் கண்களினின்றும் நீர் தா
தாரையாய் வழிந்தோடியது. ஏங்கி யிளைத்திரு
என்னையும், பாலின்றி வருந்தும் உன்னை
கண்ட அப்பெரியவர் மிகுதியும் மனம் வருந்தி
அவர் உடனே புறக்கடைக்குச் சென்று சிறி
நேரத்திற்குள் ஒரு சிறு கோப்பையில் பா
கொஞ்சம் அறுகம்புல்லும் கொண்டுவந்தார். அ
கம்புல்லைக் கண்ட நான் ஆனந்தத்துடன் அ
தலாயினேன். பின்னர், அப்பெரியவர் உ
அருகே வந்து, உன்னைத் தட்டிக்கொடுத்து
கோப்பையில் வைத்திருந்த பாலை உன் வாயி
வார்த்தார். ஆனால், நீயோ அதனைப் பரு
வகை யறியாது தரையில் சிந்தினாய். அப்போ
அப்பெரியவர் உன்னைப் பார்த்துப் புன்முறு
கொண்டார்.

குட்டி—ஆ ! அப்பெரியவர் யார், அம்மா ? அவருக்கு நான் வணக்கம் புரிய வேண்டும்—அவரை நான் வாழ்த்திப் போற்றவேண்டும்.

குதிரை — குழந்தாய், அவசரப்படவேண்டாம் ; நிதானமாய்க்கேள். யாவும் உரைக்கின்றேன். என் ஆருயிரே, பின்னர், அப்பெரியவர் மறுபடியும் தோட்டத்திற்குச் சென்று, மேலும் மேலும் அறுகம்புற்




களை அறுத்துக் கொணர்ந்து என் முன்னர்க் குவித்தார். நான் அளவிலா மகிழ்ச்சியுடன், வாலை யாட்டிக்கொண்டும், கனைத்துச் சிரமசைத்தும், அப்புற்களை அரி அரியாய் வாயில் கௌவிக் கடித்துத் தின்ன ஆரம்பித்தேன். அப்போது, எனக்குண்டான ஆனந்தப் பெருக்கினல் பாலும் சுரக்கலாயிற்று. சிறு குழந்தையாய நீயும் துன்பம் சிறிதும் இன்றி என்னை அணுகிப் பால் பருகலா

யினுய். அப்பெரியவர் நம் இன்பச் செயல்களைக் கண்டு கருணை மிகுந்த ஆனந்தக் கண்ணீர் வடித்தார்.

என் செல்வமே, நாம் இவ்வாறு மகிழ்ச்சியில் திளைத்திருக்குங் காலத்து, நம் எசமானி நம் இருவரையும் காணுமல், எண்ணமும் ஏக்கமுங் கொண்டு நம்மைத்தேடிக் கொணரும்படி தன் வீட்டிற்கு அண்டையில் இருந்த ஒருவனை அனுப்பினுள். அவன் பல இடங்களிலும் தேடியலைந்து நம்மைக் காணப்பெருது முடிவில் நாம் இருந்த அவ்வீதியை அடைந்தான். அவன், நம்மைத் தொலை தூரத்தில் கண்டதும், தன் கையில் கோலுடன் நம்மிடம் ஓடிவந்தான். நான் அவனைப் பார்த்ததும் அக் கொடியவன் என்னை ஏதேது புரிவானே என்னும் அச்சத்தால் முகம் வெளுத்து, உரோமம் சிலிர்த்து அப்பெரியவர் பக்கலில் நெருங்கிக் கண்ணீர் வடித்து நின்றேன். நான் அக்கொடியவனுக்கு அஞ்சுதலைக் கண்ட அம்முதியவர், என் முதுகில் தட்டிக் கொடுத்து, மிக்க ஆதரவோடு என்னை அணைத்துக் கொண்டார். நம்மிருவரையும் தேடிப் பிடிக்க வந்த அவன், அவ்வயோதிகரின் அருங் குணத்தைக் கண்டு அதிசயித்து, இன்னது செய்வதென்று தோன்றப்பெருமல் திகைத்து நின்ருன்.

என் கண்ணே, இவ்விதம் சிறிது நேரம் கழிந்ததும் அம்முதியவர் அவனை நோக்கி 'ஐயா, இக் குதிரையும் இதன் குட்டியும் இவ்வாறு இளைத்து உருமாறி இருத்தற்குக் காரணம் என்ன ?' என்று

அமைதியாகக் கேட்டார். அப்போது அவன், நான் பட்ட துன்பங்களேயும், நம் எசமானன் இறந்துபட நேர்ந்ததின் காரணத்தையும், நம் எசமானியின் ஆதரவற்ற நிலேயினேயும், நம்மை எவரும் விலே கொடுத்து வாங்குவதற்கு முன்வராதிருத்தலேயும் ஒருவாறு தனக்குத் தெரிந்த அளவில் கூறினன், இவைகளேக் கேட்ட அப்பெரியவர் பெரிதும் வருந்திக் கண்ணீர் வடித்தனர்; சிறு குழந்தையாகிய உன்னே அன்புடன் கட்டித் தழுவினர். அப்போது, அந்த அயலான் நம்மை அழைத்துச் செல்லும் பொருட்டு என் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த கயிற்றைப் பிடித்து இழுத்தான். அச்சமயம் நான் அவனேடு செல்லுதற்கு மனமில்லாமல் அவ்விடத்திலேயே நின்று கொண்டிருந்தேன். நான் வாராமை கண்ட அவன் என்னே அடித்து ஓட்டுதற்குத் தன் கையிலிருந்த கோலேத் தூக்கிப் பிடித்தான். அப்போது, அம்முதியவர் மிகுதியும் மனம் பதைத்து, அவனே நோக்கி, 'ஐயா, நீ இக்குதிரையை அடிக்க வேண்டாம்— இழுத்துச் செல்லவும் வேண்டாம். நான் இதனேயும், இதன் குட்டியையும் விலேக்கு வாங்கிக் கொள்ளுகிறேன். நீ இக்குதிரையின் எசமானியைத் தயை செய்து எனக்குக் காட்டு', என்று சொல்லி அவனே அழைத்துக் கொண்டு சென்றுர்.

குழந்தாய், வெளியே சென்ற அப்பெரியவர் அரை மணி நேரத்திற்குள் திரும்பி வந்து விட்டார். நம் எசமானிக்கு இவர் எவ்வளவு பொருள் கொடுத்தாரோ அதனே நான் அறியேன். அன்று முதல் நாம் இரு

வரும் அப்பெரியவர் வீட்டிலேயே வசித்து வர, தலைப்பட்டோம். என் அன்பே, அவரை யாரென எண்ணுகின்றாய்? அவர்தாம் இப்போது நம்மைக் காப்பாற்றி வருபவர்.

குட்டி—(வியப்புடன்) ஆ, இப்போது நம்மை வளர்த்து வரும் எசமானரா!—என்ன ஆச்சரியம்! அம்ம இவர் நம்மை வாங்கி யிராவிட்டால் நாம் இருவரும் இறந்துதான் போயிருப்போம்; அல்லது வேறொரு கொடியவனிடம் சென்று துன்புற்று வருந்துவோம்—அல்லவா? தாயே, இத்தகை அன்புள்ள எசமானருக்கு நாம் என்ன கைம்மா செய்யவல்லோம்!

குதிரை—என் ஆருயிரே, நம்மால் யாது புரிய இயலும் அவருக்குக் குறைவற்ற செல்வமும், நீடித்த ஆயுளும் தந்தருளும் வண்ணம் இறைவனைத்தா வேண்ட வேண்டும். என்னருஞ் செல்வமே, நா இளமையில் அடைந்த துன்பங்களால் எனக் முதுமைப் பருவம் முன்னதாகவே வந்துவிட்ட நான் எத்துணை நாட்கள் இவ்வுலகில் உ வாழ்ந்திருப்பேனோ அஃது எனக்குத்தெரியவரா என் ஆயுள் முடிவடையுங் காலம் இன்றோ-நா யோ-அல்லது என்றோ! அதனை யார் அறிவா என் கண்மணி, நீயோ இன்னமும் இளங்குழந்தை உன் வாழ்நாட்கள் இனி எவ்விதம் கழியுமோ எப்பாவி வந்துன்னை ஏதேது செய்வானோ? இன்புற்று வாழ்வையோ—துன்புற்றுத் தாழ்வை யோ? அல்லலுறுவாயோ—ஆனந்தம் பெ வாயோ? அறிகிலேன்—அறிகிலேன். ஆதலா

என் அன்பே! ஆரமுதே, இன்பே, இன்னமுதே, என் அருமைக் கண்மணியே, நான் கூறும் நன் மதியை நீ என்றும் நினைவில் வை. நாம் இம்மானி டர்கட்கு மீளா அடிமை—மீளா அடிமை. இதனை நீ ஒரு போதும் மறவாதே; நீ அன்பில் சிறந்து, அறிவில் முதிர்ந்து, உண்மையில் உயர்ந்து இருப் பினும் சரியே—இவைகளில் ஒருசிறிதும் வாய்க்கப் பெருத மானிடன் ஒருவன் உன்னை விலை கொள் ளின் நீ அவனுக்கு அடிமையே. இதில் நீ சிறி தும் ஐயுறுதல் வேண்டாம். குழந்தாய், உன் தேகம் இளைக்கினும் சரியே—நீ நோயால் வருந்தினும் சரியே உன் எசமானன் கட்டளையை நீ என்றும் கடக்காதே. ஏனெனில் நீ அடிமை. 'அடிமை சொல் அம்பலம் ஏருது'. ஆதலால், என் ஆருயிரே, உன் தலைவன் உன்னை அடித்து அடித்து அல்லல் படுத்தினும், கோபத்தால் கொல்ல நினைக்கினும் நீ அவனுக்கு அடங்கி நடப் பாயாக—

இவ்வாறு கூறும்போது குட்டி தன் நிலைமையை நினைந்து கண்ணீர் வடிக்கிறது.)

ஆ! என் அருமைக் குழந்தாய், நான் உனக்கு ஏதே தோ உரைத்து உன்னைத் துன்புறுத்துகின்றேன். கண்மணி! நீ கண்ணீர் வடிக்க நான் எங்ஙனம் சகிப்பேன். என் அன்பே, நீ அழவேண்டாம். இறைவன் உனக்கு ஒரு குறையும் செய்யான். கடவுளை நம்பினோர் கைவிடப் படுவாரோ? ஈசன் எளியோர்க்கு நேசன். அவனன்றி அணுவும்

அசையுமோ? ஆதலால், என் அருமைக் கண்மணி! நீ அழவேண்டாம்—அழவேண்டாம்.

குட்டி—(அழுதவண்ணம்) ஓ! கடவுளே—கடவுளே எங்கள் அடிமைத் தன்மை எப்போது நீங்கும்—ஓ! இறைவனே! ஈசனே! நாங்கள் இச்சை யாய் இன்புற்று வாழுங்காலம் எப்போது வரும் (ஏங்கி நிற்கின்றது.)

குதிரை—கைலை நாதா! கருணையங்கடலே! என் குழந்தை இன்னலுற்று ஏங்கா வண்ணம் அருள் புரியவேண்டும்— என் செல்வம் இன்புற்று எப் போதும் வாழவேண்டும். ஐயனே! மெய்யனே ஆனந்த வள்ளலே! அருள் செய்யும்—அருள் செய்யும்.

சிறிது நேரம் இரண்டும் மௌனமாய் நிற்கின்றன.

குதிரை—என் அன்பே, நான் இத்துணை நேரம் பேசிய தால் எனக்குக் களைப்பு மேலிடுகின்றது. நான் பெரிதும் ஓய்ந்திருக்க எண்ணுகின்றேன். என் கண்ணே, குழந்தாய், நீ வீணில் வருந்தவேண்டா வெளியே சென்று உலவி வா. அப்போது உன் மனம் அமைதி அடையும்

(குட்டி அவ்வாறே செல்லுகின்றது.)

## இன்பமும் துன்பமும்

சிவஞானம் இதனைப் படித்துக் கொண்டிருக்கை யில் சிறுவர்களின் முகம் அடிக்கடி மாறுதலுற்று விளங் கியது. அச்சிறுவர்கள் சில விடங்களில் தலையசைத்து கேட்டனர்; கைகொட்டி நகைத்தனர்; இன்புற்றிரு

னர்; எழும்பிக் குதித்தனர். பலவிடங்களில் அவர்கள் ஏக்கங்கொண்டனர்; பெருமூச்செறிந்தனர்; இரங்கி நுன்றனர்; கண்ணீர் வடித்தனர்; அந்த உரையாடல் முடிவடைந்த பின்னர் அவர்கள் ஒன்றும் தோன்றப் பெருமல் திகைத்து நின்றனர். அப்போது சிவஞானம் தன் முகவாய்க்கட்டையின்மீது கையை வைத்துக் கொண்டு ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருந்தான். ப்புசாமிப் பிள்ளை, சிறுவர்களின் எண்ணத்தை அறிய வண்டி, அவர்களையே உற்று நோக்கிக் கொண் ருந்தனர். இவ்வாறு சிறிது நேரம் கழிந்தது.

"சிறுவர்களே, என்ன சிந்திக்கின்றீர்கள் ?" ன்று அன்புடன் வினவினார் கருணை மிகுந்த குப்பு ாமிப் பிள்ளை.

"ஆ! துன்பம்—துன்பம்! தாதா, குதிரைகளுக்கு த்துணைத் துன்பம் உண்டென்று நான் இதுகாறும் ண்ணவேயில்லை," என்று ஏங்கி யுரைத்தான் சிவ ஞானம் என்னும் சிறுவன்.

"ஆம்; தாதா, பசுவின் கன்றேனும் பாலின்றி ருந்திற்று. இக்குதிரை யடைந்த துன்பங்களோ கொடுமை—கொடுமை—கூறவொண்ணுதன," என்று ருந்தி யுரைத்தான் மணிவண்ணன் என்னும் ற்றொரு சிறுவன்.

அப்போது குப்புசாமிப் பிள்ளை அச்சிறுவர்களை நாக்கி, "பிள்ளைகளே, இக்குதிரை அடைந்த துன்பம் இவ்வளவுதான் என்று எண்ணவேண்டாம். எனக்குத் தரிந்த சிலவற்றையே நான் இதில் எழுதி யிருக்கின் றன். இக்குதிரை எந்தெந்தச் சமயத்தில் இன்னும்

என்னென்ன துன்பங்களை யடைந்ததோ ? அவைகளை யெல்லாம் அறிவார் யார் ? அவை எல்லாம் வல்ல இறைவனுக்கும், இக்குதிரைக்குமே தெரியும்,'' என்று மிக்க இரக்கத்தோடு மொழிந்தனர்.

உடனே ஒரு சிறுவன் குப்புசாமிப் பிள்ளையைக் கூர்ந்து நோக்கி, "தாதா, இஃது உண்மையில் நடந்தது தானா ? அல்லது ஒரு கட்டுக் கதையா ? '' என்று சந்தேகத்துடன் வினவினான்.

'' பிள்ளைகளே, இஃதோர் கதையன்று ; உண்மையில் நிகழ்ந்ததே இதில் சிறிதும் ஐயுறவேண்டாம்," என்றனர் முதியவர்.

''ஆனால் தாதா, இவைகளெல்லாம் தங்களுக்கு எவ்வாறு தெரியும் ?'' என்று அவசரத்துடன் வினவினான் அச்சிறுவருள் ஒருவன்.

''பிள்ளைகளே, நான் இக்குதிரை இருக்க நேர்ந்த இடங்களுக்கெல்லாம் சென்று அங்குள்ளோரை அடுத்தடுத்துக் கேட்டும் சிந்தித்தும் இச்செய்திகளை உணர்ந்தேன். இல்லையேல் இவைகளில் ஒரு சிறிதும் எனக்குத் தெரிந்திராது," என்றார் அப்பெரியவர்.

''அப்படியா ! ஆனால், தாதா, தாங்கள் குதிரை வியாபாரம் செய்யும் மகமதியன் வீட்டுக்குச் சென்றிருந்தீர்களா ?'' என்றான் வேறொரு சிறுவன்.

''அவ்விடம் சென்றேன், ; ஆனால், நான் அவனைக் காணவில்லை. அவன் வியாபார நிமித்தமாக வெளிநாட்டிற்குச் சென்றிருந்தான். இன்னமும் அவன் திரும்பி வந்திருப்பான் என்று எண்ணுதற்கிடமில்லை,'' என அமைதியுடன் விடை யளித்தார் குப்புசாமிப் பிள்ளை.

"தாதா, அது கிடக்கட்டும். அந்தக் குதிரைப் பந்தயக்காரனைத் தாங்கள் கண்டீர்களா ?'' என்றான் வேறொருவன்.

''ஆம் கண்டேன் ; அவன் இன்னமும் நொண்டியாகவே கிடக்கின்றான். அன்றியும் அவன் இப்போது மிகத் தாழ்ந்த நிலையில் உண்பதற்கும் உடுப்பதற்கும் கூடப் போதிய பொருள் இல்லாமல் வருத்தமுற்றுக் கிடக்கின்றான். ஆனால், அவன் பிடிவாத குணமும் முரட்டுத் தனமும் இப்பொழுதும் ஒழியவில்லை. சமயம் வாய்த்தால் உங்களுக்கு அவனை நேரில் காட்டுகின்றேன்,'' என்று விரைந்து கூறினர் அவ்வயோதிகர்.

''என்ன ஆச்சரியம் இது ! இவர் இவ்விதம் சொல்லுவதால் யாவும் உண்மையென்றே தோன்றுகின்றது. ஆனால் ! தாதா, டாக்கார்ட் dog - cart வைத்திருந்த அச்செல்வந்தர் இப்போதும் இருக்கின்றாரா ? அவரை எங்களுக்குக் காட்டுவீர்களா ?'' என்று வியப்புடன் கேட்டான் மணிவண்ணன்.

"அப்பா, அவர் சில நாட்களுக்கு முன்னர்தான் இறந்துவிட்டார். ஆதலால், நான் அவரை எவ்வாறு காட்டுதல் கூடும் ? அவர் மைந்தர்கள் இப்போதும் இருக்கின்றார்கள். அவர்கள் வெகு தூலவில் இல்லை. இவ்வூரில்தான் இருக்கின்றார்கள். வேண்டுமானால், நாளையதினம் உங்களை அவர்களிடம் அழைத்துச்செல்கின்றேன். அப்போதேனும் உங்களுக்குச் சந்தேகம் ஒழியுமா ?'' எனப் புன்முறுவலுடன் புகன்றார் குப்புசாமிப் பிள்ளை.

அப்போது சிவஞானம் அவசரத்துடன், 'தாதா இவைகளெல்லாம் எனக்கு வேண்டா. தாங்கள் சொல்வது உண்மையானல் குதிரையும் அதன் குட்டியும் எங்கே யிருக்கின்றன ? முன்னர் அதைச் சொல்லுங்கள் '' என்று விரைந்து கூறினன்.

'' ஓ ! அவைகளா—அவை விலை கொடுத்து வாங்கிய அம்முதியவரிடம் இருக்கின்றன,'' என்று நிதானமாய்ப் பதிலளித்தார் குப்புசாமிப் பிள்ளை.

"என்ன தாதா, 'அம்முதியவர்' என்ருல் எங்களுக்கு எப்படித் தெரியும் ? அவர் ஊர், பெயர் முதலியவற்றை உரைத்தாலன்ரோ உண்மை தெரியும் ? '' என்று அவாவுடன் வினவினன் சிவஞானம்.

"நல்லது—சிறுவர்களே, அம்முதியவர் இன்னர் என்பதை நீங்கள் அவசியம் அறிந்துகொள்ள வேண்டுமா?'' என அமைதியாய்க்கேட்டார் குப்புசாமிப் பிள்ளை.

"ஆம் ; தாதா, அவரை மட்டுமல்ல ; நாங்கள் அக் குதிரையையும், அதன் குட்டியையுங் கூட எங்கள் கண்களால் பார்க்கவேண்டும். அல்லையேல், நாங்கள் இதனைச் சிறிதும் நம்பமாட்டோம்,'' என்று உரத்துக் கூறினன் சிவஞானம்.

"ஆம்-ஆம் ; தாதா, அப்படித்தான் செய்யவேண்டும். அல்லையேல், நாங்கள் நம்பவே மாட்டோம்—நம்பவே மாட்டோம்,'' என்று எல்லாச் சிறுவர்களும் அப்போது இரைச்சலிட்டுக் கூவினர்.

அப்போது குப்புசாமிப் பிள்ளை, புன்முறுவலோடு அவர்களை நோக்கி, "அன்புள்ள சிறுவர்களே, அவசரப்

படவேண்டாம். நிதானமாய்க் கேளுங்கள். குதிரையையும், குட்டியையும் விலை கொடுத்து வாங்கிய அம்முதியவர் இந்த ஊரில்தான் இருக்கின்றார். அவரை நீங்கள் எல்லோரும் பார்த்திருக்கின்றீர்கள். அவர் இப்போது உங்களோடுதான் உரையாடிக்கொண்டிருக்கின்றார். அவர் தாம் குப்புசாமிப் பிள்ளை," என்று அன்போடும், அமைதியோடும் மொழிந்தார்.

இதைக் கேட்டதும் சிறுவர்களுக்கு அளவு கடந்த ஆச்சரியம் உண்டாயிற்று. "தாதா !—இது உண்மை தானா—உண்மைதானா?" என்று ஒவ்வொருவரும் அவாவுடன் கேட்டனர்.

" அன்புள்ள சிறுவர்களே. இன்னமும் சந்தேகமா? தோட்டத்திற்குச் சென்று குதிரையையும், அதன் குட்டியையும் பாருங்கள். அப்போது உண்மை விளங்கும்," என்றார் குப்புசாமிப் பிள்ளை.

அம்முதியவர் இதைச் சொல்லி முடிப்பதற்குள், சிறுவர்கள் 'ஓ' வென்று சத்த மிட்டுக் கொண்டு தம் இருக்கையை விட்டு எழும்பிக் குதித்தனர். அவைகளைக் காணவேண்டுமென்னும் அவாவினால் அவர்கள் ஒருவர் மேலொருவர் விழுந்து தோட்டத்திற்கு ஓடினர். குப்புசாமிப் பிள்ளையும் அவர்களுக்குப் பின்னால் மெதுவாய் நடந்து சென்றனர்.

பசும்புற்கள் அடர்ந்துள்ள அத்தோட்டத்தின் ஒரு புறத்தில் தன் இச்சையாய்த் திரிந்து கொண்டிருந்த குதிரைக் குட்டியை அச் சிறுவர்கள் கண்டு மிக்க ஆர்வத்தோடு அதன் அருகே விரைந்தோடினர். அப்போது

அக்குதிரைக் குட்டி மிகவும் மருட்சியடைந்து துள்ளிக் குதித்து ஓட ஆரம்பித்தது. அது கண்ட சிறுவர்கள் அஃது அச்சம் நீங்கி அருகே வரும் பொருட்டுப் பல இனிய வார்த்தைகளால் அதை அழைக்கலாயினர்.

"ஓ குதிரைக் குட்டியே, நாங்கள் உனக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டோம். அஞ்சவேண்டாம்; அருகே வருவாய்," என்றான் ஒருவன்.

''ஓ குழந்தாய், உனக்குக் கோப்பை நிறையப் பால் தருகிறேன்; ஓடிவா—ஓடிவா;" என்றான் மற்றொருவன்.




''ஓ! என் செல்வமே, உனக்கு முத்தம் தருகிறேன் வருவாய்—வருவாய்,'' என வேண்டி நின்றான் வேறொருவன்.

அச்சிறுவர்கள் இவ்வாறெல்லாம் வருந்திக் கூப்பிட்டும் அஃது அச்சம் நீங்கி அருகே வரவில்லை. அது கண்ட சிறுவர்கள் இன்னது செய்வதென்று தெரியா

மல் ஏங்கி நின்றனர். அச்சமயத்தில் குப்புசாமிப் பிள்ளை அங்கே வந்து சேர்ந்தனர். அவரைக் கண்டதும் அக் குதிரைக் குட்டி மிக்க ஆவலோடு ஓடிவந்து அவர் அருகே நின்றது. அப்போது, அச்சிறுவர்களுக்கு உண்டான ஆனந்தம் சொல்ல முடியாது. ஒருவன் அதன் கழுத்தைத் தன் கைகளால் இறுகத் தழுவிக்கொண்டான். வேருெருவன் அதன் முகத்தில் முத்தம் தந்தான். மற்றவர்கள் அதைச் சூழ்ந்து நின்று கொண்டு தம் கைகளால் தட்டிக் கொடுப்பதும் தடவிப் பார்ப்பதுமாய் இருந்தனர். அப்போது அக்குதிரைக் குட்டியாதும் தோன்றப்பெருமல் திகைத்து நின்றது. உடனே குப்புசாமிப் பிள்ளை அவர்களை நோக்கி, "அருமைச் சிறுவர்களே, போதும்–போதும்; சிறு குழந்தையாய அதனைத் தொந்தரவு செய்யவேண்டாம்; விட்டுவிடுங்கள்—விட்டுவிடுங்கள்," என்று சொல்லி அவர்களை விலக்கினுர்.

சிறுவர்களிடமிருந்து விடுபட்ட அந்த குதிரைக் குட்டி முன்போல் தோட்டத்தில் ஓடி விளையாட ஆரம்பித்தது. பின்னர், அச்சிறுவர்கள் குப்புசாமிப் பிள்ளையை நோக்கி, "தாதா, எங்கே; இதன் தாய்? அதனை நாங்கள் பார்க்க வேண்டும்; வாருங்கள்—வாருங்கள்," என்று அவரை அழைத்துக் கொண்டு அப்புறம் சென்றனர். சிறிது தூரம் சென்றதும், மெத்தென்று பசும் புல் நிறைந்த ஒரு படுக்கையின் மீது வயது சென்ற குதிரையொன்று படுத்திருத்தலை அச் சிறுவர்கள் கண்டு அவ்விடத்தே விரைந்தோடினர். குப்புசாமிப் பிள்ளை அவர்களைத் தொடர்ந்து மெல்லச் சென்றனர்.

அச்சிறுவர்கள் அதன் அருகே சென்றதும் அசைவற்று நிற்கலாயினர். ஏனெனில், அஃது அப்போது தன் கண்களை மூடிக்கொண் டிருந்ததால், நல்ல உறக்கத்தில் இருந்தது என்று அவர்கள் எண்ணினர். ஆதலால், அச்சிறுவர்கள் அங்கே சிறிதும் சந்தடி செய்யாமல் இருந்தனர். குப்புசாமிப் பிள்ளை அங்கே வந்ததும்



சிறிது நேரம் அதைக் கூர்ந்து நோக்கினர். பின்னர், அவர் உள்ளம் பதைத்து, "ஆ! உனக்கு முடிவில் இக்கதியா நேர்ந்து விட்டது!—அந்தோ! நான் பட்டதெல்லாம் பயனற்றுப் போயிற்றே!" என்று விம்மி விம்மி அழத் தொடங்கினர். அப்போது அங்குள்ள சிறுவரில் சிலர், "ஆ! தாதா, குதிரை இறந்தா போயிற்று!" எனக் கேட்டுத் திகைத்தனர்; சிலர் கண்ணீர் வடித்தனர்; சிலர் தேம்பித் தேம்பியழுதனர்.

இவ்வாறு சிறிது நேரம் சென்றதும் குப்புசாமிப் பிள்ளை தம் மனதை ஒருவாறு தேற்றிக்கொண்டார். அச்சிறுவர்களும் கண்களைத் துடைத்துக்கொண்டனர்.

சில நிமிஷங்கள் வரை எல்லோரும் மௌனமாய் நின்றிருந்தனர். பின்னர், அம்முதியவர், சிறுவர்களை நோக்கி, "பிள்ளைகளே, இக்குதிரையின் வயிற்றின் மீதுள்ள தழும்பை நோக்குங்கள். இதுதான் அச்சண்டாளப் பந்தயக்காரன் தன் கூரிய கத்தியால் குத்திய இடம்," என்று மனம் பதைத்துக் கூறினர். அப்போது அச்சிறுவர்கள், " ஐயோ பாவம் !" என்று மனமிரங்கி அந்தத் தழும்பைத் தம் கைகளால் தடவினர். அப்போது ஒரு சிறுவன் "ஆ ! தாதா, இதன் முன்னங்காலில் நேர்ந்த பலத்த காயம் இன்னமும் ஆறவில்லையே !" என்று ஆச்சரியத்துடன் கூறினன். உடனே குப்புசாமிப் பிள்ளை மிக்க துயரத்துடன். "ஆ !—அதனை ஆற்றுதற்கு நான் பெரிதும் முயன்றேன். என் முயற்சியெல்லாம் விழலுக் கிரைத்த நீராகிவிட்டன. முடிவில், அதுவே இதற்கு எமனாய் முடிந்தது," என மெலிந்த குரலினால் மொழிந்தார்.

இவர்கள் இவ்விதம் பேசிக்கொண் டிருக்கையில் சூரியன் மறைந்து விட்டான். அன்று அமாவாசையாதலால், அத்தோட்டத்தில் இருள் வந்து கவிந்து கொள்ள ஆரம்பித்தது. அதுகண்ட குப்புசாமிப் பிள்ளை அச்சிறுவர்களை நோக்கி, "பிள்ளைகளே, இராக்காலம் சமீபித்துவிட்டது. உங்கள் தாய் தந்தையர் உங்களைக் காணுது வருந்துவர். ஆதலால், நீங்கள் சென்று வாருங்கள்," என்று கம்மிய குரலுடன் மெல்ல உரைத்தனர்.

இத்தகைய நிலைமையில் அம்முதியவரை விட்டு நீங்குதற்கு அவர்கட்குச் சிறிதும் மனமில்லை. எனினும்,

அவர் கட்டளையை மீறுதற்கு அஞ்சியும், தம் தாய் தந்தையர் தேடியலைவார்கள் என்று எண்ணியும், அச் சிறுவர்கள் அதற்கு ஒருவாறு சம்மதித்தனர். அவர்கள் அவ்வாறு செல்லும்போது, சிவஞானம் என்னும் சிறுவன் அம்முதியவரைப் பார்த்து, "தாதா, நாங்கள் நாளைய தினம் வருகின்றோம்," என மொழிந்தான். அப்போது குப்புசாமிப் பிள்ளை, "அப்பா, தன் தாய் இறந்ததை அக்குதிரைக் குட்டி அறிந்தால் அஃது எவ்வாறு வருந்தும் என்பதை நீயே எண்ணிப்பார். நான் அதன் அருகே யிருந்து அதனைத் தேறுதல் செய்ய வேண்டும். ஆதலால், நான் சில நாட்கள் தனிமையாய் இருக்க விரும்புகின்றேன். ஒரு வாரம் நீங்கள் ஒருவரும் இங்கு வருதல் வேண்டா," எனத் துயரத்துடன் இயம்பினர்.

அச்சிறுவர்கள், அவர் வார்த்தையை மறுத்துரைத்தற்கு இயலாதவர்களாய், அவரைப் பணிந்து விடை பெற்றுத் தத்தம் இருப்பிடம் ஏகினர். அன்று இரவு அவர்களில் ஒருவனும் வயிரார உணவு கொள்ளவில்லை; பிறரோடு வார்த்தையாடவுமில்லை. அவர்கள் அன்று சீக்கிரத்தில் படுக்கைக்குச் சென்றனர். எனினும் ஒருவனும் நல்ல உறக்கம் கொள்ளவில்லை. சிவஞானமும், மணிவண்ணனும் அன்று இரவு முழுதும் குதிரையைக் குறித்தும், அதன் குட்டியைக் குறித்தும் ஏதேதோ கனுக்கள் கண்டிருந்தனர்.

## நாய்க்குட்டிச் சுவாமியார்

ஐந்து நாட்கள் சென்றன. தன் தாயை இழந்த அக்குதிரைக் குட்டிக்கு அப்போதும் துயரம் நீங்கவில்லை

குப்புசாமிப் பிள்ளை அதன் துன்பத்தைப் போக்குவதற்குப் பெரிதும் முயன்றார். அவர் அவ்வாறு முயன்றும் அது இன்பமுறவில்லை. ஆதலால், அவர் வேறொரு புதிய குதிரைக் குட்டியை மிக்க விலை கொடுத்து வாங்கி அதனோடு விளையாட விட்டார். அப்போதுதான், அது வயிறார உணவு கொள்ள ஆரம்பித்தது; ஓடி ஆடித் திரியத்துடங்கியது; துன்பம் நீங்கி இன்புற்றிருந்தது.

குப்புசாமிப் பிள்ளை, இறந்துபோன அக்குதிரையின் உடலைத் தம் தோட்டத்தின் இடையே புதைத்து வைத்தார்; அதனோடு அமையாது, அந்த இடத்தில்,



உயர்ந்த சலவைக் கற்களால் ஒரு சிறு மேடையும் அமைத்தார்; அம்மேடையின்மீது அக்குதிரையைப் போல் சிறு பதுமை ஒன்றும் செய்து வைத்தார்.

ஒவ்வொரு நாளையும் விரல் விட்டு எண்ணிக் கழித்துவந்து அவர்கள், ஒரு வாரம் கழிந்ததும் அம்

முதியவரைக் காண ஆவலாய் ஓடிவந்தனர். அன்று குப்புசாமிப் பிள்ளை தம் வீட்டுத் திண்ணையின்மீது காணப்படவில்லை. ஆதலால், அவர்கள் தோட்டத் திற்குள் சென்றனர். இறந்துபோன குதிரையின் உருவச்சிலையொன்று அத்தோட்டத்தின் இடையே பொலிவுற்று விளங்குதலையும், தாயை இழந்த அக் குதிரைக் குட்டி, வேறொரு புதிய குதிரைக் குட்டியோடு இன்புற்று விளையாடிக் கொண்டிருத்தலையும் கண்ட சிறுவர்கள் கழிபேருவகை பூத்தனர். அப்பதுமைக்கு அருகே ஓர் அழகிய சாய்ப்பு நாற்காலியின்மீது சாய்ந்து கொண்டிருந்த குப்புசாமிப் பிள்ளை அச்சிறுவர்களைக் கண்டு புன்முறுவல் செய்தார். அச்சிறுவர்கள் அவ் விடத்தே அமர்ந்து நெடுநேரம் வரையில் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தனர்.

பின்னர், சிவஞானம் என்னும் சிறுவன் குப்பு சாமிப் பிள்ளையை நோக்கி, "தாதா, பசுவின் கன்றைக் குறித்து எழுதி யிருக்கின்றீர்களே—அதுவும் உண்மை தானா ?" என்று அன்புடன் வினவினான்.

அதற்குக் குப்புசாமிப் பிள்ளை, "ஆம், உண்மையே ; அக்கன்று நம் தோட்டத்திற்கு அயலில் உள்ள இடை யன் வீட்டில்தான் இருந்தது," என்றார்.

இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையில் வயது சென்ற சுவாமியார் ஒருவர், ஒரு சிறு நாய்க் குட்டியைக் கையில் தாங்கிக் கொண்டு, அவ்விடத்தே வந்தார். அவரைக் கண்டதும் குப்புசாமிப் பிள்ளை "வாருங்கள் ; நாய்க்குட்டிச் சுவாமிகளே," என்று அன்புடன் கூறித் தம் இருக்கையை விட்டு எழுந்து

அவருக்கு மரியாதை செய்தார். சுவாமியார் மீது அச் சிறுவர்களுக்கும் அதிக அன்பு உண்டு. ஆதலால், அவர் கள் அவரைக் கண்டதும் கைகூப்பித் தொழுது,"சுவாமி வணக்கம் ; இத்துணை நாட்களாகத் தாங்கள் எங்குச் சென்றிருந்தீர்கள் ? " என்று மிக்க பணிவுடன் வினவினர்.

அப்போது நாய்க்குட்டிச் சுவாமியார் அவர்கட்கு வாழ்த்துக்கூற, "அன்புள்ள சிறுவர்களே, நான் தேச யாத்திரையின் நிமித்தம் வடநாடுகளுக்குச் சென்றிருந் தேன். இன்று காலைதான் இவ்வூரை யடைந்தேன்," என்று கூறிக் குப்புசாமிப் பிள்ளையை நோக்கி, "பிள்ளை யவாள், இவ்விடத்தே குதிரையின் உருவச்சிலை யொன்று இருத்தலின் காரணம் என்ன ?'' என்று அதி சயித்துக் கேட்டனர். குப்புசாமிப் பிள்ளை அக்குதிரை யின் வரலாற்றினை அவருக்குச் சுருக்கமாக விளக்கிக் கூறினர்.

அது கேட்ட சுவாமியார், மிகுதியும் மனமிரங்கி, "அந்தோ ! கொடுமை-கொடுமை,'' என்று கூறித் தம் கரங்களால் இரு செவிகளையும் பொத்திக் கொண்டு சிறிது நேரம் மௌனமாய் இருந்தனர். பின்னர், அவர் அங்குள்ள சிறுவர்களை நோக்கி, பிள்ளைகளே, இவ்விதம் எத்துணையோ பிராணிகள் நம்மிடம் அகப் பட்டுத் துன்புற்று இறக்கின்றன. அந்தோ ! அவை கள் படுந் துயரத்தைப் பார்த்துப் பார்த்து என் கண்களும் பூத்துப்போயின. கேட்டுக் கேட்டு என் செவிகளும் செவிடடைந்தன ; எண்ணி யெண்ணி என் மனமும் புண்பட்டது.— ஆ ! எண்ணில்லாத எருதுகள் உழவரிடம் அகப்பட்டுத் துன்புறுகின்றன !

தீமை யென்பது சிறிதும் அறியாத ஆடுகள் ஆயிரக் கணக்காக நாள்தோறும் கொல்லப்படுகின்றன ! நாய் களும் பூனைகளும் நம்மிடம் படும்பாடுகளோ சொல்லி முடியா ! இவைகளெல்லாம் எந்தக் காலத்தில் துன்பம் நீங்கி இன்புற்று வாழுமோ— எந்தக் காலத்தில் எல்லா வேலைகளும் இயந்திர உதவியினாலேயே நடை பெறுமோ—அந்தக் காலத்தில் தான் நம்நாடு சுகமடை யும் ; அப்போது தான் நம் நாடு நாகரிகத்தில் சிறந்த தென்று எல்லோராலும் போற்றப்படும் ; அப்போது தான் நாம் மானுடரென்று மதிக்கத் தக்கவராவோம் இறைவன் இன்னருள் எப்போது சுரக்குமோ ? அறி கிலேன்-அறிகிலேன்.

“சிறுவர்களே, ஒரு பசுவின் கன்று இறந்தமைக் காகத் தன் அருமை மைந்தனை இழந்தான் மனுமுறை கண்ட சோழன் என்னும் மகாராசன் ; ஒரு புறாவைக் காக்கும் நிமித்தம் தன் தசையை அரிந்து அரிந்து கொடுத்தான் **சிபிச்சக்கரவர்த்தி** என்னும் சிறந்த வள்ளல் ; பசுக்களைக் காத்தலே கடன் எனக் கொண்டு சண்டேசுவர நாயனார் என்னும் பட்டம் பெற்றார் விசாரசருமர் என்னும் அந்தணச் சிறுவர். இவ்விதம் உயிர்களைக் காத்து உயர்வடைந்த பெரியோர்கள் நம் இந்திய நாட்டில் பலர் இருந்திருக்கின்றனர். ஆதலின், அன்புள்ள சிறுவர்களே, நீங்களும் உங்களால் இயன்ற உதவியைப் புரிந்து பிற உயிர்களின் துன்பங் களைப் போக்குங்கள். எக்காரணத்தைக் கொண்டும், எந்தக் காலத்தும், எவ்வகையான தீங்கையும் அவை கட்குப் புரிய எண்ணாதீர்கள். துன்பம் எல்லோர்க்கும் ஒன்றே. மானிடனென்றும், மிருகமென்றும் பிரித்து

நோக்காதீர்கள். மானிடன் தன் துன்பத்தை நமக்கு அறிவிப்பான்; மிருகத்திற்கோ அவ்வாறு அறிவிக்க இயலாது, ஆதலால், அதன் துயரத்தை நாம் மிகுதியும் கவனித்தல் வேண்டும்.

"அறிவின் மிக்க சிறுவர்களே, நான் உங்களுக்கு இன்னமும் அதிகமாய்க் கூறவேண்டியதில்லை. மக்களாகிய நமக்கு இன்றியமையாது வேண்டப்படுவது ஒன்று உண்டு அதுவே அன்பு என்னும் அருங்குணமாகும். நாம் இவ்வுலகத்தில் இன்புற்று வாழுதற்கும். புகழ்பெற்றுஓங்குதற்கும் ஆதாரமாய் இருப்பது அன்பே. மறு வுலக இன்பங்களை அநுபவிப்பதற்கும், அழியாத மோட்ச இன்பத்தைப் பெறுதற்கும் அடிப்படையாய் அமைந்து கிடப்பது அன்பே. நாம் ஒருவரோடு ஒருவர் ஆடிக் குலாவிக் களித்தற்குக் காரணமாய் இருப்பது அன்பே. எல்லா வுயிர்களையும் படைத்துக் காத்து அழிக்கும் இறைவனது இயற்கை வடிவம் அன்பே. ஆதலால், நாம் அதனை நாடோறும் பொன்னேபோல் போற்றிப் பாதுகாத்தல் வேண்டும்; அநுதினமும் அதனை நாம் ஓம்பி வளர்த்தல் வேண்டும். அதுவே நமக்கு அழியாத செல்வம்; அதுவே நமக்கு நீங்காத தோழன்; அதுவே நமக்குத் தாய், தந்தை, ஆசான், அரசன் அனைத்தும் ஆகும், அதனைப் பெறுதற்கே நாம் இவ்வுலகத்தில் பிறந்தோம்; இவ்வரிய மானுட தேகத்தைப் பெற்றோம். ஆதலால், அன்பும் அருமையும் வாய்ந்த இன்பச் சிறுவர்களே, நான் இதுகாறும் கூறியவற்றைச் சிறிதும் மறவாது உயிர்களைக் காத்து அன்பினை வளர்த்து அழியாப் பெரும் பேற்றைஅடைய

முயலுங்கள்-முயலுங்கள்'' என்று மிக்க ஆராமையோடு கூறினர்.

சுவாமியார், சிறுவர்களுக்கும் போதித்த நல்லுரையைக் கேட்ட குப்புசாமிப் பிள்ளை பெரிதும் மனமுவந்தார். பிள்ளைகள் யாவரும் சுவாமியாரின் முகத்தையே உற்று நோக்கிக்கொண் டிருந்தனர். சில நிமிஷங்கள் வரையில் அவர்களில் ஒருவரும் வாய்திறக்கவில்லை, பின்னர்ச் சிவஞானம் என்னும் சிறுவன், சுவாமியாரை நோக்கி, "சுவாமிகளே, எல்லா உயிர்களிடத்தும் அன்பாய் இருத்தல் வேண்டும் என்று தாங்கள் கூறியிருக்கின்றீர்கள். அதில் எனக்கு ஒரு சந்தேகம் உண்டாகிறது. அஃதாவது, தேள், பாம்பு முதலிய கொடிய ஜந்துக்கள் உள அன்ருே ? அவை நம்மைக் கடித்தலேயே பெருந்தொழிலாகக் கொண்டிருக்கின்றனவே ; அவைகளிடம் நாம் எவ்வாறு அன்பாய் இருத்தல் கூடும் ? என்பதேயாகும்," என மிக்க பணிவோடு கேட்டான்.

'' ஆம், சுவாமி ; அதை எங்களுக்கு விளக்குதல் வேண்டும்'', என்று விரைந்து மொழிந்தான் மணிவண்ணன் என்னும் மற்றுமோர் சிறுவன்.

அப்போது சுவாமியார், சிறுவர்களை நோக்கி, '' பிள்ளைகளே, நீங்கள் கேட்பது நியாயமே. ஆனல், அவை நம்மைக் கடிப்பதே தொழிலாகக் கொண்டிருக்கின்றன என்றெண்ணுவது பெரும் பிழை. உயிர்கள் தம்மைத்தாம் காத்துக்கொள்ளுதற்கு இறைவன் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொருவித சக்தியை அளித்திருக்கின்ருர். தேளையும் பாம்பையும் கண்டால் நமக்கு எவ்

வாறு அச்சம் உண்டாகிறதோ அவ்வாறே அவைகளுக்கும் நம்மைக் கண்டால் அச்சம் உண்டாகிறது. நம்மைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு நாம் எவ்வாறு அவைகளைக் கண்டால் கொன்றுபோட எண்ணுகின்றோமோ, அவ்வாறே அவைகளும், தம்மைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு, நம்மைக் கண்டால் கடிக்க முந்துகின்றன. ஆதலால், அவை நம்மை நெருங்குங் காலத்து, நாம் மனம் பதருமல் அசைவற்று ஒரே இடத்தில் நின்றிருப்போமாகில் அவைகளால் நமக்கு ஒரு தீங்கும் நேராது. நாம் சிறிது அசைந்தாலும் அவை அச்சத்தால் நம்மைக் கடிக்க முயலுகின்றன. இதை நிரூபித்தற்குச் சிறிது காலத்திற்கு முன் நிகழ்ந்த ஒரு செய்தியை உரைக்கின்றேன்; கேளுங்கள் :

## தைரியமுள்ள போர்வீரன்

" அருமைச் சிறுவர்களே, சில ஆண்டுகளுக்கு முன் பொம்பாய்ப் பட்டணத்திலிருந்த போர்வீரன் ஒருவன் ஒரு நாள் குடி வெறியினால் அறிவு மயங்கி வழியில் செல்லுவோரை அடிப்பதும் திட்டுவதுமாய் இருந்தான். அதனை அறிந்த அவன் மேலதிகாரி அவன்மீது சினந்து அவனுக்கு ' ஒருவாரக் கடுங்காவல்' என்று தண்டனை விதித்தார். அப்போர் வீரன் மயக்கம் தெளிந்ததும் தான் புரிந்த பிழையைக் குறித்துப் பெரிதும் வருந்தினான்.; கடுங்காவற் சிறைச்சாலையில் தான் ஒரு வாரம் வரையில் இருக்க நேர்ந்ததை எண்ணி யெண்ணி ஏங்கினான். தான் செய்த குற்றத்தை மன்னித்து விடும்படி தன் தலைவனிடம் அவன் பெரிதும் வேண்டினான். என்ன முயன்றும் அவன்

எண்ணம் சிறிதும் நிறைவேறவில்லை. ஆதலால், அவன் அன்றே காவற் கூடத்திற்குக் கொண்டுபோகப் பட்டான்.

"கடுங்காவல் என்பது மிகவும் கொடுமையான தண்டனை. அத்தண்டனையைப் பெற்றவன் ஒருவரோடும் பேசுதல் கூடாது; அவனை ஒருவரும் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டார்கள். அவனுக்கு விதித்திருக்கும் காலம் வரையில் அவன் அச்சிறையிலேயே இருத்தல்வேண்டும். மலஜலகழிவுகளையும் அவன் அவ்விடத்திலேயே கழித்தல் வேண்டுமாம்.

"பிள்ளைளே, இத்தகைய கடுங்காவலில் அப்போர் வீரன் இருக்க நேர்ந்தது. ஆதலால், அவன் அப்போது தன் நிலைமையைக் குறித்து மிகுதியும் வருந்தினான். பின்னர், தன் மனத்தை ஒருவாறு தேற்றிக்கொண்டு அவன் அச்சிற்றறையைக் கூர்ந்து நோக்கினான். அதன் நான்கு புறமும் உறுதியான சுவர்கள் உயரமாக எழுப்பப்பட்டிருந்தன. அவ்வறைக்குக் காற்று வருதற் பொருட்டு, ஆள் உயரத்திற்குமேல், இருப்புக் கம்பிகளால் இணைக்கப்பெற்ற ஒரு சிறு துவாரம் இருந்தது. அவ்வறையின் கதவும் மிக்க வலுவாகக் காணப்பட்டது. அப்போது, பனி மிகுந்த குளிர்கால மாதலால், அவன் இருந்த இடம் மிகவும் ஈரக்கசிவுள்ளதாய் இருந்தது. அவ்வறையின் ஒரு புறத்தே சுவரின் அடியில் சிறு சந்து ஒன்று காணப்பட்டது. அஃது அவ்வறையைக் கழுவிச் சுத்தம் செய்தற் பொருட்டு அமைக்கப் பட்டுள்ளது என்று அவன் எண்ணினான்.

"சிறுவர்களே, அந்தச் சிற்றறையிலேயே அப் போர்வீரன் அன்று பகல் முழுவதும் தனிமையாய் இருந்தான். மாலைப் பொழுது நெருங்கியது. யாதொரு வேலையும் இன்மையால் அவன் மிகச்சீக்கிரத்தில் படுத் துறங்க எண்ணினன். ஆதலின், அவன் தனக்குக் கொடுக்கப்பட்டிருந்த கம்பளத்தின் ஒரு பகுதியைத் தலையணையாக மடித்து வைத்துக்கொண்டான்; மிகுந் துள்ள பாகத்தை நிலத்தே விரித்து அதன்மேல் படுத் துக் கொண்டான். ஆனல், அப்போது அவனுக்கு உறக்கம் சிறிதும் வரவில்லை. எனினும், அவன் தன் கண்களை மூடிய வண்ணம் ஏதேதோ எண்ணிக்கொண் டிருந்தான். சுமார் இரவு ஏழு மணி யிருக்கும்; அவ்வறை முற்றிலும் இருள்சூழ்ந்தது. அப்போர் வீரன் அப்போதுதான் சிறிது உறக்கம் கொள்ள ஆரம் பித்தான். அச்சமயத்தே, 'புஸ்—புஸ்' என்னும் ஒரு வித ஒலி அவன் காதில் பட்டது. அதனல் அவன் உறக்கம் நீங்கி, அந்த ஒலி உண்டானதின் காரணத் தையும், அது கேட்கும் இடத்தையும் கூர்ந்து கவனிக்க முயன்றன். ஆனல், அவன் அவ்விடத்தை விட்டு எழுந்திருக்கவுமில்லை; தன் கண்களைத் திறந்து பார்க் கவும் இல்லை.

"சிறிது நேரத்திற்கெல்லாம் மறுபடியும் 'புஸ்— புஸ்' என்னும் ஒலி இன்னும் சற்று அதிகமாகக் கேட்க ஆரம்பித்தது. முன்பு பார்த்த சிறு சந்தின் வழி யாகத்தான் அந்த ஒலி வருகின்றது என்பதை அவன் உணர்ந்தான். எனினும் அஃது இன்னது என் பது அப்போதும் அவனல் நன்கு அறிந்துகொள்ள முடியவில்லை. இவ்விதம் அவன் சிறிது நேரம் மனக்

கலக்கத்துடன் இருந்தான். அப்போது அவன் காலின் மீது மிக்க கனமான ஏதோ ஒன்று ஏறுவதை உணர்ந்தான்; பின்னர், அது மிகவும் நீண்ட உடலுடையது என்பதையும் அவன் உணர்ந்தான்.

"பிள்ளைகளே, அஃது என்ன வென்று எண்ணுகின்றீர்கள்? அஃது ஒரு பெரிய பாம்பு. இதை அந்தப் போர்வீரன் அப்போதே உணர்ந்துகொண்டான். எனினும் அவன் என் செய்வான்! அவன் இருக்கும் அறையோ பூட்டப்பட்டிருக்கிறது; அவன் கையிலும் ஆயுதம் ஒன்றும் இல்லை. சத்தமிட்டுக் கூவினாலும் ஒருவராலும் வந்து உதவிசெய்ய முடியாது; அந்தப் பெரும் பாம்பும் அவனை அப்போதே கடித்து விடும். ஆதலால், அவன் அசைவற்றுக் கட்டைபோல் கிடந்தான். அந்தக் கொடிய பாம்போ அவன் காலை விட்டு இறங்கவே இல்லை. அது மேலும் மேலும் நகர்ந்துகொண்டே வந்து முடிவில் அவன் தொண்டையை அடைந்தது. அப்போதும் அவன் சிறிதும் அஞ்சவில்லை; உடலை அசைக்கவுமில்லை. உயிரின்றி விரைத்துக் கிடக்கும் பிணம்போல் அவன் அப்போது இருந்தான். பின்னர், அது மெல்ல மெல்ல அவன் வயிற்றண்டை வந்து தன் உடலைச் சுருட்டிக் கொண்டு அவ்விடத்தே வெகு நேரம் வரையில் படுத்துக் கிடந்தது.

"சிறுவர்களே, அப்போது அப்போர்வீரன் நிலைமை எவ்வாறு இருந்திருக்கும் என்பதை நீங்களே சிந்தித்துப் பாருங்கள். அவன் வயிறு சிறிது அதிகமாய் வீங்கினாலும், அல்லது வீக்கத்தில் குறைந்தாலும், அக் கொடிய பாம்பு அவனை உடனே கடித்துவிடும். ஆதலால், அதில் அவன் மிக எச்சரிக்கையாய் இருந்தான்.

அவ்வாறு இருப்பது எவ்வளவு துன்பமான செயல்! அவ்வளவு துன்பத்தையும் அவ்வீரன் தாங்கிக்கொண்டு நெடுமரம் போல் நிலத்தில் கிடந்தான். மணி பத்தாயிற்று; அப்போதும் அக்கொடிய பாம்பு அவன் வயிற்றை விட்டு அகலவேயில்லை. மணி பன்னிரண்டாயிற்று. அரவமோ அவ்விடத்தை விட்டுச் சிறிதும் அசையவில்லை. என்ன செய்வான் பாவம்! ஏழு நரக வேதனைகளையும் ஒன்றாய் அநுபவிக்கினும் இக்கொடிய



வேதனைக்கு ஈடாகுமா? ஆனால், அப்போதும் அவ்வீரன் தைரியத்தைக் கைவிடவில்லை. அவன் அசைவு என்பது சிறிதும் இன்றி அப்படியே கிடந்தான். மணி ஒன்றாயிற்று; அப்போது அந்தப் பாம்பு மெதுவாய்த் தன் உடலை நீட்ட ஆரம்பித்தது. 'இனி எனக்குப் பயம் இல்லை. அரவம் அகன்று விடும்,' என்று எண்ணினான் அவ்வீரன். ஆனால், அதுவோ அவ்விதம் செய்யவில்லை. அப் பொல்லாத பாம்பு மேலும் மேலும் நகர்ந்து அவன் மார்பினுக்கு அருகே வந்து தன்

தலையை உயரத் தூக்கிச் சிறிது நேரம் நாற்புறமும் சுற்றிப் பார்த்தது.

"அன்புள்ள சிறுவர்களே, கவனியுங்கள்-கவனியுங்கள். மிகப் பரிதாபகரமான அவன் நிலைமையினைக் கூர்ந்து கவனியுங்கள். அப்போது, அவன் தன் கண்களைச் சிறிது திறந்திருப்பானேயாகில் அக்கணமே அவன் உயிர் அவ்வுடலை விட்டு நீங்கியிருக்கும். அச்சத்தால் மார்பு "படபட" வென்று அடித்திருந்தாலும் சரியே—மூச்சு சிறிது அதிகமாய் விட்டிருந்தாலும் சரியே—அவன் அப்போதே உயிரிழந்திருப்பான். அந்த ஒப்பற்ற உண்மை வீரனுக்கோ இவ்விதத் தடைகள் சிறிதும் நேரவில்லை. அவன் அச்சமயத்தும் பிணம் போல் அசைவற்றுக் கிடந்தான். அந்தச் சண்டாளப் பாம்போ அவன் மார்பை விட்டு அகலவே யில்லை. அவ்விடத்திலேயே அது படுத்துறங்க ஆரம்பித்தது. என்ன செய்வான் பாவம் அவ்வீரன்! அவனுக்குத் தன் உயிரின் மீதிருந்த நம்பிக்கை அப்போது முற்றிலும் ஒழிந்தது. ஆனாலும், அவன் தைரியத்தைக் கைவிடவில்லை. மணி மூன்றடித்தது; மூன்றரையும் ஆயிற்று; அப்போதும் அஃது அவ்விடத்தை விட்டு அசையவேயில்லை.

"அருமைச் சிறுவர்களே, இவ்வண்ணம் இருக்க யாரால் இயலும்! முற்றிலும் துறந்த முனிவனாலும் ஆகாது—ஆகாது. ஆனால், அவ்வீரனோ சிறிதும் மனம் சலிக்கவில்லை. அவன் கைகளும் கால்களும் மரத்துப்போயின. தும்மல், இருமல், கனைத்தல் முதலியன அவனிடத்தே தலை காட்டவில்லை. ஊக்கம் அவன் உள்ளத்தே குடிகொண்டிருந்தது; தைரிய லட்சுமி

அவன் முகத்தே தாண்டவமாடினாள். அவ்வீரன் அடியற்ற நெடுமரம்போல் அசைவற்றுக் கிடந்தான்.

"மணி நான்காயிற்று ; நாகமோ நகர்ந்தபாடில்லை. அச்சமயம் அவனுக்கு ஒரு நிமிடம் ஒரு யுகம்போல் தோன்றிற்று. அவன் எத்துணை நேரம் பொறுத்திருப்பான் பாவம்! — நான் இன்று இந்நாகத்திற்கு இரையாவேன்! இது திண்ணம்—திண்ணம்,' என்று எண்ணினான் அப்போர்வீரன். எனினும், அவன் உள்ளம் அப்போதும் உறுதி கொண்டிருந்தது. 'இன்னமும் பார்ப்போம்—இன்னமும் பார்ப்போம்,' என்னும் எண்ணமே அவன் நெஞ்சில் நீங்காதிருந்தது. பொறுமையே வடிவாகக் கொண்டிருந்த அப்போர்வீரன் இவ்வண்ணம் அவ்விரவு முழுவதும் மனம் பொறுத்திருந்தான். அதிகாலை மணி ஐந்தாயிற்று ; அப்போது, அவ்வறையின்கண் சிறிது வெளிச்சம் உண்டாயிற்று. அதுகண்ட அப்பெரும்பாம்பு அவன் மார்பை விட்டு மெல்ல நகர்ந்து எங்கோ மறைந்து விட்டது.

" சிறுவர்களே, அப்போது அவ்வீரன் எவ்வளவு மகிழ்ச்சியடைந்திருப்பான்! அவன் உள்ளம் எவ்வளவு குளிர்ந்திருக்கும்! நீங்களே நன்கு எண்ணிப் பாருங்கள். எனினும், சிறுவர்களே, அவன் அவ்விடத்தை விட்டு மிக்க மகிழ்ச்சியுடன் எழுந்து விட்டான் என்று எண்ணுகின்றீர்களா? இல்லை-இல்லை. அப்போர்வீரன் அப்போது தன் கண்களையும் திறந்துபார்க்கவில்லை ; உடலையும் அசைக்கவில்லை. ஏனெனில், அவன் தன் மார்பின் மீதிருந்த பாரம் நீங்கியதை உணர்ந்தானே யன்றி அப் பாம்பு இன்ன இடத்தில் இருக்கின்றது என்பது அவனுக்குத் தெரியாது.

அது பக்கலிலேயே படுத்திருக்கினும் இருக்கலாம். அல்லது வெளியே சென்றிருக்கினும் இருக்கலாம். அஃது அவனுக்கு எவ்வாறு தெரியும்? அவன் தன் கண்களைத் திறக்கும்போது அப்பாம்பு அவ்வறையிலேயே இருக்குமானால் அவனை அக்கணமே கடித்துவிடுமன்றோ? ஆதலால், அவன் அப்போதும் பொறுமையையே கடைப்பிடித்திருந்தான்.

"காலை மணி ஏழரையாயிற்று; கதிரவன் கிரணங்கள் அவன் கண்கள்மீது பட்டன. அப்போதுதான் அப்போர்வீரன் தன் படுக்கையை விட்டு எழுந்திருக்க எண்ணங்கொண்டான். எனினும், அவன் உடனே அவ்வாறு செய்யவில்லை. முதலில் அவன் தன் கண்களைச் சிறிது சிறிதாகத் திறந்தான்; பின்னர், அவன் தன் மீதேனும் தனக்குப் புறத்தேனும் தனக்குத் தெரியாதபடி அப்பாம்பு மறைந்திருக்கலாம் என்னும் எண்ணத்தோடு தன் பாதத்திலிருந்து தோள்கள் வரை ஒருமுறை கூர்ந்து நோக்கினான். ஆனால், அவ்வீரன் அச்சமயத்தும் தன் உடலைக் கொஞ்சமேனும் அசைக்கவில்லை. அதன் பின்னர், அவன் தன் தலையைச் சிறிதும் அசைக்காது அவ்வறையின் மூன்று பக்கங்களிலும் விழிகளைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தான். அரவம் அவ்விடங்களிலும் இல்லாமை கண்டு அவ்வீரன் முற்றிலும் மனங்களித்தான். எனினும், அவ்விடத்தை விட்டு அவன் அப்போதும் எழுந்திருக்கவில்லை. ஏனெனில், தனக்குப் பின்புறத்தில் ஒருகால் இருக்கலாம் என்னும் எண்ணம் அப்போது அவன் மனத்தில் தோன்றியது. ஆதலால், அவன் சிறிது நேரம் சிந்திக்கலானான். 'அந்தப் பெரும் பாம்பு முன்பு வந்த அத்துவாரத்தின்

வழியே சென்றிருத்தல் வேண்டும். இது நிச்சயம்—ஒரு கால் அஃது எனக்குப் பின் புறத்தில் மறைந்திருத்தல் கூடுமோ? பின் புறத்தில் எங்கே மறைந்திருக்கும்? மிகக் குளிர்ந்த இடத்தில் படுத்திருக்கப் பாம்புகள் விரும்புவதில்லை. ஆதலால், நான் தலைக்கு அணையாக வைத்திருக்கும் கம்பளத்தில் அநேகமாய் ஒளிந்திருக்கலாம். ஐயோ! அக்கொடும் பாம்பு அங்கே மறைந்திருந்தால் என் செய்வது? நான் எழுந்திருப்பதற்குள் அஃது என்னை வெடுக்கென்று கடித்துவிடுமோ! அந்தோ! கடவுளே! ஆயின் நான் இதுவரையில் பட்ட பாடனைத்தும் பயனற்றுப் போகுமோ!' என அப்போர் வீரன் ஒரு சிறிது வருந்தினன். பின்னர், 'ஆறிலும் சாவு; நூறிலும் சாவு; அஞ்சுவதில் யாதும் பயனில்லை" அப்பாம்பு வெளியே சென்றிருப்பினும் சரியே; என் தலையணையில் ஒளிந்திருப்பினும் சரியே—நான் எழுந்திருக்கும்போது என் தலைக்கு அணையாக உள்ள அக் கம்பளத்தை வலுவாய்ப் பூமியில் அழுத்தியபடியே எழுந்திருப்பேனாகில் அப்பாம்பு அதில் மறைந்திருப்பினும் என்னை ஒன்றும் செய்ய அதனால் இயலாது,' எனத் தீர்மானித்தவனாய் அப்போர்வீரன் திடீரெனத் தன் கைகளால் அக்கம்பளத்தை அழுத்திக்கொண்டு படுக்கையை விட்டு விரைந்தெழுந்தான். அதே சமயத்தில் அந்தக் கம்பளத்திலிருந்து அப்பெரும் பாம்பு தன் படத்தை விரித்துக்கொண்டு சரேலென்று கிளம்பி அப்போர்வீரனைக் கடிக்க முயன்றது.

"பிள்ளைகளே, அவ்வீரன் அவ்வளவு முன் சாக்கிரதையாக விருந்தும் அவனுக்கு எதிர்பாராது நேர்ந்த துன்பத்தைப் பாருங்கள்; ஆனால், அப் போர்வீரனோ

அதைக் கண்டு சிறிதும் அஞ்சவில்லை. அவன் அக்கணமே விரைந்து அதன் கழுத்தை உறுதியாய்ப் பிடித்துக் கொண்டான். அப்போது, அந்தப் பாம்பு வெகுண்டு தன் வாலை நீட்டிற்று. அவ்வீரன் அதையும் உடனே மற்றொரு கையால் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டான்.

"சிறுவர்களே, அப்பெரும்பாம்பை அவன் உறுதியாய்ப் பிடித்துக் கொண்டே அவ்வறையின் கதவருகே சென்று தன் கால்களால் அதனைப் 'படீர்-படீர்' என்று உதைத்தான். வெகுநேரம் வரையில் ஒருவரும் அங்கே வரவில்லை. பின்னர், ஒரு காவலாளன் அவ்விடத்தை அடைந்து, காரணம் யாதென வினவினான். அப்போது அவ்வீரன் 'பாம்பு—பாம்பு; கையில் பிடித்துக்கொண்



டிருக்கிறேன்; கதவைத் திற—கதவைத் திற,' என்று கதறினான். அக்காவலாளன் உடனே ஓடிச் சென்று தலைமைக் காவலாளனிடம் அச்செய்தியைக் கூறி அவனையும் அழைத்துக் கொண்டு திறவு கோலுடன் விரைந்து வந்தான்.

"சிறைச்சாலையின் கதவு திறக்கப்பட்டது ; அப் போர்வீரன் அந்தப் பெரிய பாம்போடு வெளியே வரு தலைக் கண்டு. எல்லோரும் பயந்து ஓட ஆரம்பித்தனர். அப்போது, அவன் அவர்களுக்குத் தைரிய மொழிகள் கூறி, அவர்களை அழைத்துக் கொண்டு புதர் அடர்ந் திருந்த ஓர் இடத்தை அடைந்து, அங்கே அந்தப் பெரும் பாம்பை விசிறி எறிந்தான். அதை அவன் கொன்று போடாமைக்கு அநேகர் வருந்தினர். அப் போது அவன்; 'ஐயா, என்னைக் கொல்லாது விடுத்த அதனைக் கொல்லுதல் நியாயமாகுமா ? நான் எவ் வாறு அதனைக்கண்டு அஞ்சினேனோ, அவ்விதம் அது வும் என்னைக் கண்டு அஞ்சியிருக்கு மல்லவா ? ஆத லின், அப்பாம்பும் என்னைப்போல் இன்பமாய்ச்செல்லு தலே நியாயம் என்று,' கூறினான்.

"பின்னர், அன்றிரவு முழுவதும் தான்பட்ட துன் பங்களை அவன் அவர்களுக்கு ஒன்றையும் விடாது கூறினான். அவனது வீரச் செயலினைக் கேட்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். இச்செய்தி அப் போர்வீரனது மேலதிகாரிக்கும் எட்டிற்று. அது கேட்ட அவ்வதிகாரி அப்போர்வீரனது ஆண்மையைக் குறித் தும், பொறுமையைக் குறித்தும் மிகுதியும் மகிழ் வடைந்து, அவனை அன்றே அச்சிறைச்சாலையினின் றும் நீக்கி அவனுக்கு உயர்ந்த உத்தியோகமும் கொடுக்க ஏற்பாடு செய்தனர்.

"ஆதலால், அருமைச் சிறுவர்களே, தேளும் பாம்பும் அச்சத்தாலேயே நம்மைக் கடிக்க வருகின்றன. அவை வாழும் இடத்திற்கு நாம் செல்லாமலிருந்தால் நம்மை எந்தப் பிராணியும் துன்புறுத்தாது. இதை

நிரூபிப்பதற்கு இது போன்ற இன்னும் அநேக சம்பவங்கள் இப்போது என் நினைவில் வருகின்றன. அவைகளை யெல்லாம் இப்போது எடுத்துச் சொல்லுவதற்கு எனக்குப் போதிய நேரமில்லை. அவைகளைப் பின்னர்க் கூறுகின்றேன்.'' என்பதோடு அச்சுவாமியார் தம்பேச்சை முடித்தனர்.

## நல்லுபதேசம்

நாய்க்குட்டிச் சுவாமியார் இவ்விதம் கூறியதைக் கேட்ட சிறுவர்கள் மிகவும் வியப்படைந்தனர்; அவர்கள் அப்போர்வீரனின் மனவலிமையைக் குறித்துப் பெரிதும் புகழ்ந்து பேசினர். அப்போது, குப்புசாமிப் பிள்ளை அது சம்பந்தமாகத் தமக்கு தெரிந்த பல செய்திகளைப் பிள்ளைகளுக்கு எடுத்துக் கூறினர்.

இவ்வாறு சிறிது நேரம் சென்றது. பின்னர், மணிவண்ணன் என்னும் சிறுவன் சுவாமியாரை நோக்கி, ''சுவாமி, கொசுகு, மூட்டைப்பூச்சி முதலியன நாம் சும்மா விருப்பினும் நம்மைத் துன்புறுத்துகின்றனவே. அதற்கென்ன செய்வது?'' என்று அவாவுடன் வினவினன்.

அதுகேட்ட நாய்க்குட்டிச் சுவாமியார் அச்சிறுவனைப் பார்த்து, ''அப்பா, அஃது உண்மையே; 'நம்முடைய இரத்தத்தைக் குடித்து உயிர்வாழும்படி இறைவன் அவைகளை உற்பத்தி செய்திருக்கின்றான்,' என்று சிலர் கூறுவார்கள்; 'எவன் ஒருவன் தன் உடலையும் தான் வசிக்கும் இடத்தையும் சுத்தம் இல்லாமல் வைத்திருக்கிறானோ, அவனைத் தண்டித்தற் பொருட்டு அவைகளைக் கடவுள் அவனிடம் அனுப்புகிறார்,' என்று

நான் கூறுவேன். ஆதலால், நாம் நம் உடலையும், இருக்கையையும் சுத்தமாக வைத்துக் கொள்ளுவோமானால் அவை நம்மை வந்து அணுகமாட்டா, கடவுளும் அவைகளுக்கு வேறு பிறப்பினை அளித்து வேறுவிதமாக அவைகளை உயிர் வாழும்படி செய்துவிடுவார். அதுவே என் எண்ணம்,'' என்று புன்னகையுடன் ஒருவாறு பதிலுரைத்தார்.

அப்போது குப்புசாமிப் பிள்ளை அச் சிறுவர்களை நோக்கி, ''பிள்ளைகளே, உண்மையில் உயிர்களிடத்து அன்புள்ளவன் அவைகளின் நியாய அநியாயங்களைக் கவனிக்க மாட்டான். அவைகளுக்கு உதவி புரிதலிலேயே அவன் கண்ணுங் கருத்துமாய் இருப்பான். இன்ன பிராணிகளைக் கொன்று போடவேண்டும் என்றும், இன்ன பிராணிகளைப் போற்றி வளர்க்கவேண்டும் என்றும் எண்ணுவது சாதாரண மனிதர்களின் கொள்கை. அறிவிற் சிறந்த பெரியோர்களோ எந்தப் பிராணியையும் வதைக்க எண்ணார்கள்.

''இவ்விதம் கொல்லா விரதம் பூண்டு பல பெரியோர்கள் இவ்வுலகில் வாழ்ந்து வருகின்றார்கள். இறையவனும் அவர்கள் அன்பிற்கு மகிழ்ந்து அவ்வப்போது அவர்கட்கு அருள்புரிந்து வருகின்றான்.

## ஒரு மூட்டைப் பூச்சியின் மாயம்

''அருமைச் சிறுவர்களே, இதனை விளக்குவதற்கு நான் ஒரு சிறு நிகழ்ச்சியைக் கூறுகிறேன். சில ஆண்டுகட்கு முன்னர். ஒரு முதியவர் திருவிழாவைக் காணும் பொருட்டுத் **திருவண்ணாமலைக்குச்** சென்றிருந்தார்.

அவர் மிக்க ஏழை; ஆனால், உயிர்களிடத்து இரக்க முள்ள உத்தமர்; தூய உள்ளமும், பொறையும் நிறையும் வாய்ந்த பெரியார். அம்முதியவர், அன்றிரவு திருவிழாவைக் கண்ணாரக் கண்டு முடிந்ததும் படுத்துறங்கப் பலவிடத்தும் சென்று திரிந்தார். அன்று மக்கள் மிகுதியாய் வந்திருந்தமையால் அவருக்கு எங்கும் இடம் அகப்படவில்லை. முடிவில் அப்பெரியார் ஒரு பெரிய மண்டபத்தைக் கண்டார். அவ்விடத்தும் பலர் பள்ளிகொண்டிருந்தார்கள்; எனினும் ஒரு மூலையில், ஓர் ஆள் படுத்துறங்கப் போதிய இடம் விடுபட்டிருந்தது. அதனைக் கண்ட அம்முதியவர் மிகுதியும் மனமுவந்து அவ்விடத்தில் படுத்து உறங்கலாயினர்.

"அவர் அவ்வாறு படுத்த சிறிது நேரத்திற்கெல்லாம் யாதோ ஒன்று 'வெடு'க்கெனத் தம்மைக் கடிப்பது போன்று அவருக்குத் தோன்றிற்று. ஆதலின், அப் பெரியார் விரைந்தெழுந்து, தாம் படுத்திருந்த இடத்தைக் கையால் தடவிப் பார்த்தனர். அப்போது, வழ வழப்பும் வட்டவடிவமும் பெற்ற ஒரு சிறு பொருள் அவர் கையில் பட்டது. உடனே, அவ்வயோதிகர் அஃது ஒரு பருத்த மூட்டைப் பூச்சியே என நிச்சயித்து அதற்குத்துன்பம் உண்டாகாதபடி அதனைத் தம் விரல்களால் பக்குவமாக எடுத்தார். பின்னர், அவர் அதனை இன்னது செய்வதென்று தோன்றாமல் நெடுநேரம் யோசிக்கலானார். ஏனெனில், அதனைக் கொல்ல அவருக்குச் சிறிதும் விருப்பமில்லை. சிறிது தூரத்தில் விட்டுவிடலாமென்றாலோ எவ்விடத்தும் மக்கள் பலர் படுத்துறங்குவதால் அஃது அவர்கட்குத் தீமையாய் முடியும். அது விளைவிக்கும் துன்பத்தை நினைக்கும்போது அதனைத்

தம்மிடத்தில் வைத்துக்கொள்ளவும் அவருக்கு விருப்ப மில்லை.

"என் செய்வார் பாவம்! அம்முதியவர் சிறிது நேரம் ஒன்றும் தோன்றப் பெருது விழிக்கலாயினர். முடிவில் அவருக்கு ஒரு நூதன எண்ணம் பிறந்தது. அஃதென்ன வென்ருல், தாம் மேலே அணிந்திருந்த மெல்லிய துணியின் ஒரு மூலையில் அப்பூச்சியினை இலகுவாக முடிந்து ஒரு புறத்தே வைத்திருந்து, பின்னர் அதிகாலையில் எங்கேனும் தக்க விடத்தில் அதனை விட்டுவிடுதலேயாம். அப்பெரியவர் அவ்வாறே அதனைத் தம் மேலாடையில் மெல்ல முடிந்து ஒரு புறத்தே வைத்து உறங்கலாயினர்.

"பொழுது புலர்ந்தது; அம்முதியவர் முடிந்து வைத்த மூட்டைப் பூச்சியை முற்றிலும் மறந்தார். ஆதலின் அவர், காலைக் கடன்களை முடித்துக் கொண்டு குளித்தற்பொருட்டுக் குளத்தில் இறங்கினர். அப்போது அப்பெரியவர் தற்செயலாய் அம்முடிப்பைக் கண்டார். உடனே, அவருக்கு மூட்டைப் பூச்சியின் எண்ணம் வந்தது. 'ஆ! நான் பாவி; என்ன காரியம் செய்தேன்! அந்தோ! அப்பூச்சி இத்துணை நேரம் இறந்தேயிருக்கும்!' என்று கூறித் தம்மைத் தாம் நொந்து கொண்டே விரைந்து கரைக்கேறி அம்முடிப்பை மெல்லென அவிழ்த்தார்.

"ஆ என்ன ஆச்சரியம்! அஃது ஒரு சிறந்த இரத்தினமாய் இருந்தது. அதனைக் கண்டதும் அவ்வேழை முதியவர் மிகுதியும் வியப்புற்ருர். 'இன்னலுற்று வருந்தும் நமக்கு இஃது இறைவன் அளித்த

அருட்கொடை போலும்! என அவர் எண்ணி இன்புற்றார். ஆதலால், அன்புள்ள சிறுகளே, நாம் கூடிய வரையில் பிறவுயிர்களைத் துன்பத்தினின்றும் காத்தற்கே முயற்சி செய்ய வேண்டும்பிராணிகளிடத்து மட்டில் அன்று; சிறுபூச்சிகளிடத்தும் நாம் அன்பாய் இருத்தல் வேண்டும்; நம்மைப்போன்ற மனிதரிடத்தும் அவ்விதமே அன்பாய் இருத்தல் வேண்டும்.




## ஓர் அரிய நன்மதி

"என் செல்வச் சிறுவர்களே, இதனைக் கருத்தூன்றிக் கவனியுங்கள்; உலகம் முன்னேற்றமடைதற்கு மூலகாரணம் சிறுவர்களேயாவர். இளைஞர்களாகிய உங்கள் அறிவையும் குணத்தையும் கண்டு, இனி உலகம் இத்தன்மையில் இருக்கும் என்பதை ஒருவன் எளிதில் இயம்பிவிடலாம். ஏனெனில், பெரியோர்களாய நாங்கள் இன்னும் சில்லாண்டுகளில் இவ்வுலகை விட்டு மறைய வேண்டியவர்கள்; நீங்களோ நெடுங்காலம் வாழவேண்டியவர்கள்; இன்பதுன்பங்களை அநுபவிக்க

வேண்டியவர்கள் ; நம் நாட்டில் புகழை நாட்ட வேண்டியவர்கள். ஆதலால் சிறுவர்களே, நீங்கள் ஒவ்வொருவரும் ஒழுக்கத்தாலும், கொள்கையாலும் சிறந்திருக்க முயலுங்கள் ; உங்கள் நண்பர்களுக்கும் இதனைப் பன்முறையும் இடித்திடித்துச் சொல்லுங்கள். அருமைச் சிறுவர்களே, ஒன்றைச் சொல்லுதல் யாவர்க்கும் எளிது ; ஆனால், அவ்வாறு புரிதலோ அரிது – அரிது. ஆதலால், நீங்கள் ஒழுக்கத்தினையே உறுதியாய்ப் பிடியுங்கள். அவ்வொழுக்கம் ஒருநாளில் வாராது. ஆதலின், பன்னாளும் சலிப்பின்றிப் பழகுங்கள் —பழகுங்கள்.

'' ஒழுக்கம் என்பது யாது ? எல்லா உயிர்களிடத்தும் அன்பாய் இருத்தலினும் உயர்ந்த ஒழுக்கம் இவ்வுலகில் இல்லை. அன்பென்னும் அருங்குணத்தில் யாவும் அடங்கும். எல்லா உயிர்களிடத்திலும் அன்புள்ள ஒருவன் பிறரிடம் கடுஞ்சொல் கூறமாட்டான்; ஒருவரையும் வஞ்சிக்க எண்ணமாட்டான் ; ஈகையை மறுக்கான் ; இறுமாப்புங் கொள்ளான்; பொய் பேசான் ; பிறர் வருந்த மனம் பொறுக்கமாட்டான். முடிவாகக் கூறுமிடத்து எவ்விதத் தீயகுணமும் அவனிடத்து எக்காலத்தும் தலைகாட்டாது. ஆதலால், அன்பைப் பெற்றவன் அனைத்தையும் பெற்றவன் ஆகின்றான். அவ்வன்பு சிறிதும் இல்லாதவனுக்கு எவ்வித நற்குணமும் எக்காலத்தும் இராது. ஆதலின், இன்பச் சிறுவர்களே, நீங்கள் அன்பென்னும் அழியாச் செல்வத்தை நாள்தோறும் போற்றுங்கள் — போற்றுங்கள்.

''அன்பு என்பது யாது? அதனை எவ்வாறு பெறுவது ? என உங்களுக்கு ஐயம் நிகழலாம். பிள்ளைகளே,

அன்பு என்பது ‘இதுதான்’ என்று ஒருவரால் சுட்டிக் காட்ட இயலாது. அது நம் உள்ளத்தே தோன்றும் ஒருவித நிகழ்ச்சி. அதனையே நாம் ஆசை என்று சொல்லுகின்றோம். நமக்கு மாம்பழத்தைக் கண்டால் ஆசை யுண்டாகிறது; நம் நண்பனைக் கண்டால் ஆசையுண்டாகிறது. தாய்க்குக் குழந்தையைக் கண்டால் ஆசையுண்டாகிறது. அந்த ஆசை என்பதே அன்பு, பக்தி, கருணையெனப் பல பெயரைப் பெறுகின்றது. ஆதலால், அஃது எல்லாரிடத்தும் இயல்பாய் உள்ளதொன்றே. ஆனால், அது சிலரிடத்தே பொய், பொறாமை, வஞ்சனை முதலிய தீய குணங்களால் மறைக்கப்பட்டுத் தன் இயற்கை ஒளி மழுங்கிக் கிடக்கின்றது. அன்றியும், அநேகர் அதனைச் சிறந்த வழியில் செலுத்துவதில்லை. சிலர் வேடிக்கை விளையாட்டுக்களில் மட்டும் அன்பைச் செலுத்துகின்றார்கள். மற்றும் சிலர் உண்ணுதலிலும் உடுத்துதலிலும் மட்டும் அன்பைச் செலுத்துகின்றார்கள். வேறு சிலர் மனைவி மக்களிடத்து மட்டும் அன்பைச் செலுத்துகின்றார்கள். அவ்வாறு புரிவதால் அவர்கள் முடிவில் துன்பத்தையே அநுபவிக்கின்றார்கள்; அழியாத புகழையும், ஒழியாத இன்பத்தையும் முற்றும் இழக்கின்றார்கள்.

“ அருமைச் சிறுவர்களே, ஆயின், அவ்வன்பை நாம் எங்குச் செலுத்துதல்வேண்டும்? எல்லாம் வல்ல இறைவனிடத்தும், பெரியோர் பலரிடத்தும் செலுத்துங்காலத்து அது பக்தி என்று அழைக்கப்படுகின்றது; நமக்குச் சமமாய் உள்ள உயிர்களிடத்துச் செலுத்தும்போது அன்பு என்று பெயர் பெறுகின்றது; நம்மினும் தாழ்ந்த பிறவுயிர்களிடத்துச் செலுத்தும்போது அது

கருணை என்று கொண்டாடப்படுகின்றது. ஆகவே, அன்பு, கருணை, பக்தி யாவும் ஒரு பொருள் குறித்த பல சொல்லாகும்.

" நாம் அவ்வன்பை எவ்வாறு போற்றி வளர்ப்பது என்பதும் ஆராயத்தக்கதே. கற்றல் கேட்டல் சிந்தித்தலால் அன்பு அதிகரிக்கின்றது. கற்றல் நன்று; கற்றலோடு அமையாது கேட்டல் அதனினும் நன்று; கற்றல் கேட்டலோடு நில்லாது சிந்தித்தல் சாலச் சிறந்




தது அரிய பெரிய உண்மைகள் யாவும் சிந்தித்தலாலேயே பெறப்படுகின்றன. அவ்வாறு சிந்தித்துத் தெளிவடைந்த பெரியோர்களையே உலகம் போற்றித் தொழுகின்றது. இறைவன் தன்மையும் அவன் நமக்குப் புரியும் நன்மையும் சிந்தித்தாலன்றோ விளங்கும்? அவ்வாறு விளங்கினாலன்றோ அவன் மீது நமக்கு அன்பு அதிகரிக்கும்? உயிர்களின் பலவித குணங்களும், அவைகளின் இன்பதுன்பங்களும் சிந்தித்தாலன்றோ விளங்கும்? அவ்வாறு விளங்கினாலன்றோ அவைகளின் மீது நமக்குக் கருணையதிகரிக்கும்?

"ஆதலால், சிறுவர்களே, நீங்கள் கற்றல் கேட்டலோடு அமையாது சிந்திக்கவும் முயலுங்கள். அவ்வாறு சிந்தை செய்தலுக்குச் சாதகமாக இன்று நான் உங்களுக்கு ஒரு வேலை தருகின்றேன். அஃதென்னையெனில் நான் சென்ற வாரம், உங்களுக்கு உயிர்களிடத்து அன்பு என்பது குறித்து ஒருவாறு விளக்கியிருக்கின்றேன் அல்லவா? அவ்விதம் நீங்களும் ஏதேனும் ஒரு பிராணியின் நிலைமையைக்குறித்து, நான் எழுதியிருப்பதுபோல் ஓர் உரையாடல் எழுதிக் காட்டுதலேயாகும். உங்களில் எவன் எழுதும் உரையாடல் மிகவும் சிறந்திருக்கின்றதோ அவனுக்குத் தக்க பரிசில் அளிக்கப்படும். ஆதலால் ஒவ்வொருவரும் அப்பரிசிலைப் பெறுதற்கு முந்துதலோடு அன்பென்னும் அழியாச் செல்வத்தை ஓம்பி வளர்க்கும் வழியினையும் தேடுங்கள்," என்று முறுவலோடு மொழிந்தனர்.

## பரிசுப் போட்டி

சிறிது நேரத்திற்குள் அச்சிறுவர்களுக்கு எழுதுகோலும், தாள்களும் கொடுக்கப்பட்டன. பின்னர், அவர்கள், 'எவ்வாறு ஆரம்பிப்பது? எவ்வாறு முடிப்பது'? என்று எண்ணியெண்ணி யேங்கலாயினர். அப்போது, நாய்க்குட்டிச் சுவாமியார், அவர்களை நோக்கி, "சிறுவர்களே, ஏன் விழிக்கின்றீர்கள்?' நீரில் விழுந்தன்றோ நீந்துதல் வேண்டும்? எழுதிப் பாருங்கள்; யாவும் இயலும். 'சிறுவர்களாகிய நாம் எவ்வாறு எழுதப் போகின்றோம்!' என்று எண்ணித் தயங்குதல் வேண்டாம். அறிவு எல்லோர்க்கும் பொது. ஆய்ந்

தோய்ந்து செய்யின் அனைத்தும் இயலும். வருந்தி உழைப்போர்க்கு வாராதன இல்லை. முயற்சி வீண் போகாது; மெய்வருந்தக் கூலி தரும். நீங்கள் சிறிதும் மனந் தளரவேண்டாம். எதுவும் துவக்கத்தில் துன்பம் தரும்; எனினும் பின்னர்ப் பயக்கும் இன்பம் பெரிதேயாகும். ஆதலின், பிள்ளைகளே, மனம் தளராமல் முயற்சி செய்யுங்கள். அஃது உங்கள் எண்ணத்தை ஈடேற்றும்; உயர்வு பெற வழி காட்டும்; உற்றதுணையாய் ஒளிரும்.'' என்று அவர்களுக்கு நன்மதி புகட்டினர்.

இதனைச் செவிமடுத்த சிறுவர்கள், உவகையும் ஊக்கமுங்கொண்டு சுமார் ஒரு மணி நேரம் வரையில் எழுதினர். பின்னர், குப்புசாமிப் பிள்ளை அவைகளை ஒவ்வொன்ருக எடுத்துப் படித்துப் பார்த்தனர். அவர்கள் எழுதியிருந்த உரையாடல்களின் தலைக் குறிப்புக்களும், அதனை எழுதினேரின் பெயரும் வருமாறு:

| தலைக்குறிப்பு | | எழுதினேரின் பெயர் |
|---|---|---|
| 1. ஒரு பூனையின் துன்பம் | ... | கமலநாதன் |
| 2. பூனையும் நாயும் | ... | தினகரன் |
| 3. ஆடும் கோழியும் | ... | பரிமேலழகன் |
| 4. குதிரையும் கழுதையும் | ... | கணிகண்ணன் |
| 5. வாத்தும் கோழியும் | ... | சிவானந்தன் |
| 6. ஓர் உழவன் வளர்த்த எருது | | செல்வநாதன் |
| 7. சிற்றெறும்பின் துயரம் | ... | மணிவண்ணன் |
| 8. ஆடும் அதன் குட்டியும் | ... | சிவஞானம் |
| 9. கோழியும் அதன் குஞ்சுகளும் | ... | தூயமணி |
| 10. பொன்வண்டு பட்ட பாடு | ... | ஞானசம்பந்தன். |

இவைகளுள் சிவஞானம் எழுதிய 'ஆடும் அதன் குட்டியும்' என்பது பொருட் பொருத்தத்திலும், உரை நடையிலும் பெரிதும் சிறந்திருந்தது. ஆதலின், அவனே அவர்களில் முதன்மையாக நின்றான். மணி வண்ணன் எழுதிய 'சிற்றெறும்பின் துயரம்' என்பது ஒருவாறு போற்றக் கூடியதாகவே யிருந்தது. மற்றை யோர் எழுதிய உரையாடல்கள் உரை நடையில் சிறந் திராவிடினும் படித்தற்கு இன்பத்தையே விளைவித்தன.

குப்புசாமிப் பிள்ளை இவைகளைப் படித்து முடிந்த தும் "நாய்க்குட்டிச்சுவாமியார், நன்று! நன்று! பிள்ளை யவர்களே! நம் சிவஞானம் எல்லோரினும் மிக்க நன்றாகவே எழுதியிருக்கின்றான்; ஒரு சிறுவன் இவ்வளவு எழுதுவது மிகவும் கடினமே. — தம்பி, சிவஞானம், அருகே வா; நீ இவ்வளவு அழகாகவும், தெளிவாகவும் எழுதுவாய் என்று நான் இதுவரை எண்ணவேயில்லை. அப்பா, நீ மேலும் மேலும் கற்க முயல்வாயாக; கற்றவை போதும் என்று எக்காலத் தும் எண்ணுதல் வேண்டாம்; 'கல்வி கரையில', என்பதை என்றும் கருத்தில் வை," எனக் கூறினார்.

சிவஞானம் அப்போது தலை குனிந்த வண்ணம் ஒன்றும் பேசாமல் நாணி நின்றான். பின்னர், மணி வண்ணன் என்பவன் குப்புசாமிப் பிள்ளையை நோக்கி, "தாத்தா, நம் சுவாமியார் கூறியபடி சிவஞானம் எழுதி யுள்ளதே எல்லோரினும் சிறந்திருக்கின்றது. ஆதலால், பரிசில் பெறத் தக்கவன் அவனே; இதில் சிறிதும் சந்தேகமில்லை?" என்றான்.

இதைக் கேட்டதும் பிற சிறுவர்கள், "ஆம்; தாத்தா, அவனுக்கே பரிசில் அளிக்கவேண்டும்.

அதுவே நியாயம்-அதுவே நியாயம் " என விரைந்து கூறினர்.

அப்போது மற்றுமோர் சிறுவன் " தாத்தா, அவனுக்கு என்ன பரிசில் கொடுக்கப் போகின்றீர்கள் ? எப்போது கொடுக்கப் போகின்றீர்கள் ?" என ஆவலுடன் மொழிந்தான்.

குப்புசாமிப் பிள்ளை சிறிது நேரம் ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருந்தார். பின்னர், அவர் அச்சிறுவர்களை நோக்கி, " அன்பும் அருமையும் வாய்ந்த இன்பச் சிறுவர்களே, நீங்கள் ஒவ்வொருவரும் மிக்க அழகாகவே எழுதியிருக்கின்றீர்கள். இதில் சிறிதும் நீங்கள் சந்தேகம் கொள்ளவேண்டாம். ஆனால், சிவஞானமோ ! உங்கள் எல்லோரையும் வென்றுவிட்டான். சிறுவர்களே, நான் இன்னின்னருக்குப் பரிசில் கொடுக்கப் போகின்றேன் என்பதையும், அவை இன்னின்ன பரிசில் என்பதையும் என்னல் இப்போது கூறவியலாது. நீங்கள் எல்லோரும் அடுத்த வாரம் காலை இவ்விடம் வாருங்கள் ; அப்போது உங்களுக்கு யாவும் விளங்கும். குழந்தைகளே ! காலம் நீடித்துவிட்டது. ஆதலின், நீங்கள் சீக்கிரம் வீடுபோய்ச் சேருங்கள்" என அன்புடன் மொழிந்தனர்.

இவ்விதம் குப்புசாமிப் பிள்ளை கூறி முடிந்ததும் அச் சிறுவர்கள் ஆனந்தத்தோடு தங்கள் இல்லம் ஏகினர். சுவாமியாரும், குப்புசாமிப் பிள்ளையும் அன்று இரவு நெடுநேரம் வரையில் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தனர்.

## பரிசும் பாராட்டும்

ஏழு நாட்கள் எண்ணிக் கழிந்தன. எட்டாம் நாள் எப்போது வரும் என்று காத்துக் கொண்டிருந்த சிறுவர்கள் காலை எட்டு மணிக்கே நீராடித் தூய உடை உடுத்திக் கொண்டு குப்புசாமிப் பிள்ளை அவர்களுடைய வீட்டை அடைந்தனர். என்ன வியப்பு! வீடு பெரிய திருவிழாக் கொண்டாட்டம் போல அலங்கரிக்கப்பட்டிருந்தது. குப்புசாமிப் பிள்ளை சிறுவர்களை அன்புடன் அணைத்து வரவேற்றார். சிறுவர்கள் அவருக்கு வணக்கம் செலுத்தி அவருடன் வீட்டினுள் சென்றனர்.

வீட்டுக் கூடத்தில் அவர்கள் கண்ட காட்சி அவர்களுக்குப் பெருவியப்பினையும் மகிழ்ச்சியையும் ஒருங்கே அளித்தது. கூடத்து நடுவே பெரிய மேசை நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அவற்றின்மேல் சிறுவர்களுக்குப் பிடித்தமான அவல், பொரி, கடலை, பழங்கள், இனிப்புப் பொருள்கள் யாவும் வைக்கப்பட்டிருந்தன. நாற்காலியில் நாய்க் குட்டிச் சாமியார் புன்முறுவலோடு உட்கார்ந்திருந்தார். சுவர்களில் மன்னுயிரையும் தன்னுயிர்போல் எண்ணி வாழ்ந்த புத்தர், இயேசுநாதர், மகாத்மா காந்தியடிகள், ஆப்ரகாம்லிங்கன் போன்ற பெரியவர்களின் படங்களும், உழைப்பால் உயர்வடைந்த பெரியவர்களான தாமாஸ் ஆல்வா எடிசன், சர். தி. முத்துசாமி ஐயர், பேராசிரியர் நமச்சிவாய முதலியார், மணி. திருநாவுக்கரசர், மறைமலையடிகளார், தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தரனார் ஆகியவர்களின் படங்களும் மாட்டப்பட்டிருந்தன.

இந்த ஏற்பாடுகளைக் கண்ட சிறுவர்கள் தங்களிடம் பேரன்பு காட்டும் குப்புசாமிப் பிள்ளை அவர்களையும் நாய்க்குட்டிச் சாமியாரையும் அளவற்ற அன்போடும் நன்றியோடும் நோக்கி எல்லையில்லா இன்பம் கொண்டனர்.

குப்புசாமிப் பிள்ளை அவர்களை எல்லாம் ஒழுங்காக உட்கார வைத்து விட்டுக் "குழந்தைகளே! நான் சொன்னபடி உங்கட்கு இப்போது பரிசு வழங்கப் போகிறேன். பரிசு என்ன என்பதைச் சிறிது நேரத்தில் தெரிந்து கொள்வீர்கள். பரிசு உங்களைப் பாராட்டி ஊக்குவதற்கேயாகும். நீங்கள் யாவருமே மிகவும் அழகாக எழுதியிருந்தீர்கள், எல்லோருக்குமே பரிசு உண்டு. என்றாலும் உங்களில் சிறப்பாக எழுதியிருந்த சிவஞானத்திற்கும் மணிவண்ணனுக்கும் தனிப் பரிசுகள் உண்டு. மற்றையவர்களும் அவர்களைப் பாராட்டுவதுடன் அவர்களைப் போல நன்றாக எழுதப் பாடுபடவேண்டும். எதிர்காலத்தில் நீங்களே இந்த நாட்டின் குடிமக்களாக விளங்கப் போகின்றீர்கள். ஆதலால், இளமையிலேயே இத்தகைய உயர்ந்த குணங்களை வளர்த்துக் கொண்டு நல்வாழ்வு வாழ்வீர்களாக" என்று கூறி விட்டு அறையினுள் சென்று ஒரு சிறிய மூட்டையினை எடுத்துவந்து மேசைமீது வைத்தார். சிறுவர்கள் அது என்னவாக இருக்கும் என்று ஆவலோடு எட்டி எட்டிப் பார்த்தனர்.

குப்புசாமிப் பிள்ளை அவர்கள் அம் மூட்டையினை அவிழ்த்து அதிலிருந்து இரண்டு நூல்களைக் கையில் எடுத்தார். "குழந்தைகளே! இது திருக்குறள்; உலகம்

வாழ வழிகாட்டும் உயரிய நூல். இதனைப் படித்து இதில் கூறியவாறு நீங்கள் வாழ முற்பட்டால் உங்கள் எதிர்காலத்தில் பேரும் புகழும் பெற்றுப் பெரு வாழ்வு வாழலாம். இன்னொரு நூல் திருவருட்பா மன்னுயிரைப் போலத் தன்னுயிரையும் எண்ணவேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்தை ஒவ்வொருவருக்கும் உண்டாக்கக் கூடிய உயர்ந்த நூல் இது. இதனை நீங்கள் படித்து எல்லா உயிர்களிடத்தும் அன்புடையவராய் வாழ்ந்து இறைவன் திருவருளைப் பெறுவீர்களாக'' என்று கூறி அவற்றை நாய்க்குட்டிச் சாமியாரிடம் கொடுத்துச் சிவஞானத்திற்கு வழங்குமாறு கேட்டுக் கொண்டார். நாய்க் குட்டிச் சாமியார் மிக்க மகிழ்ச்சியோடு சிவஞானத்தை அழைத்து எதிர்காலத்தில் 'சிறந்த அறிஞனாகவும் பொது நலத்தொண்டனாகவும், எல்லா உயிர்கட்கும் அன்பனாகவும் வாழ்க' என வாழ்த்தி அப்பரிசுகளை வழங்கினார். இவ்வாறே வந்திருந்த சிறுவர்கள் அனைவர்க்கும் வரிசையாகத் திருக்குறளும் திருவருட்பாவும் பரிசுகளாக வழங்கப் பட்டன.

இறுதியாகக் குப்புசாமிப் பிள்ளை அவர்கள் இரண்டு சிறு பெட்டிகளைச் சுவாமியாரிடம் கொடுத்தார். அவ்விரு பெட்டிகளுள் ஒன்றில் வெள்ளிப் பதக்கமும் மற்றொன்றில் தங்கப் பதக்கமும் இருந்தன. வெள்ளிப் பதக்கத்தில் ஒருபுறம் எறும்பைப்போல் ஓர் உருவமும் குப்புசாமிப் பிள்ளை என்னும் பெயரும், மற்றொருபுறம் 'மணிவண்ணனுக்கு அளிக்கப்பட்டது' எனவும் செதுக்கப்பட்டிருந்தன. பொற்பதக்கத்தில் ஒருபுறம் ஆட்டுக் குட்டியின் உருவமும் குப்புசாமிப் பிள்ளை என்

னும் பெயரும், மற்றொருபுறம் 'சிவஞானத்திற்கு அளிக்கப்பட்டது' எனவும் பொறிக்கப்பட்டிருந்தன. நாய்க்குட்டிச் சாமியார், சிவஞானத்தையும் மணிவண்ணனையும் அழைத்து 'வாழ்க சிவஞானம்' 'வாழ்க மணிவண்ணன்' என வாழ்த்துக் கூறி அப்பதக்கங்களை அன்போடு வழங்கினார். சிவஞானமும் மணிவண்ணனும் சுவாமியாரையும் குப்புசாமிப் பிள்ளை அவர்களையும் வணங்கி அப்பரிசுகளைப் பெற்றுக்கொண்டனர். அவர்கள் முகத்தில் பெருமிதமும் பெருமகிழ்ச்சியும் பெருக்கெடுத்தன. சிறுவர்கள் அனைவரும் 'சிவஞானம் வாழ்க,' 'மணிவண்ணன் வாழ்க' என வாழ்த்திக் கை தட்டி ஆரவாரம் செய்தனர்.

'வாழ்க சிவஞானம், வாழ்க மணிவண்ணன், வாழ்க குப்புசாமிப் பிள்ளை, வாழ்க நாய்க்குட்டிச் சாமியார்' என வாழ்த்துவதோடு இந்த நல்ல முயற்சியில் ஈடுபட்ட குழந்தைகள் அனைவரையும் நாமும் உள்ளங்குளிர வாழ்த்துவோமாக.

## மாணவர் மன்ற வெளியீடுகள்

## விளம்பரம்

1. நாலடியார் மூலம்
(அரும்பதவுரையுடன்)

2. பழமொழி நானூறு மூலம்
(அரும்பதவுரையுடன்)

3. நாராயணன்
(இளைஞர்க்கேற்ற சிறு கதை)

4. தங்கநாணயம்
(இளைஞர்க்கேற்ற சிறு கதை)

5. வரதன் அல்லது வழிதப்பிய சிறுவன்.

6. நல்ல எறும்பு
(குழந்தைகட்கேற்ற சிறு கதை)

7. நல்ல குழந்தை

8. கௌதம புத்தர் (நாடகம்)
புலவர் கோ. வில்வபதி

9. சிறுவர் நாடக விருந்து
புலவர் தணிகை உலகநாதன்

10. அடிமையின் தியாகம்

Jyothi Printers Madras-1.